உ

# சேரர் பேரூர்

(ஓர் ஆராய்ச்சி)

எழுதியவர்

எஸ். சோமசுந்தரபாரதி, M.A., B.L.,

வக்கீல், தூத்துக்குடி.

---

தமிழ்[illegible]முத்[illegible]

பதிப்பிக்கப்பெற்றது.

---

விலை அணா 10.

1917.

About this time last year, I was in Tanjore invited to speak at an Anniversary meeting of the "Karanthai Tamil Sangam" celebrated under the distinguished presidency of the Hon. The Rajah Sethupathy of Ramnad. I was then intraduced to Rao Bahadur. K. Srinivasam Pllai Avergal whose acquaintance I have learned since to value very much. And I should be greatly indebted to the Sangam even were it only for the privilege and pleasure of this acquaintance which I owe entirely to its kindness. During my short stay at Tanjore, I was a guest under his hospitable roof; and we were naturally thrown much together: and, once in the course of a rambling tete-a-tete, Mr. Srinivasam Pillai casually referred to Pandit Mr. M. Raghavayyangar's brochure—"Cheran-Chenguttuvan"—and to the theory of its author which identified the far-famed Chera capital of yore with "Anilaikaruvoor" near modern Trichinopoly. I happened to express my inability to accept that view as I found copious references in Tamil classics which, to my mind, left no doubt that the ancient Chera metropolis was a sea-port. Mr. Pillai chimed in his approval and was greatly pleased to find me holding an opinion about the city of "Vanchi" which was exactly what he wanted to emphasize to the Tamil Public. He then asked me to write to the "Sendamil" to controvert Mr. Iyengar's new-fangled theory. And when I expressed my reluctance to be drawn into the vortex of polemical disputes with great Tamil Pandits like the author of "Cheran-Chenguttuvan" Mr. Pillai waxed vehement with all the fervour of his great and high-souled sincerity which

greatly touched me and ultimately vanquished all ı y hesitation; for, I found I could not bring myself to refı se response to his fervid and irresistible appeal. I promis d to him therefore to write a refutation as desired.

After I returned to Tuticorin, however, I put off writi g my article time after time although Mr. Pillai showered n me a number of reminders,—waiting for some holiday t first, and then when it came frittering it away with soı e other time-devouring vocations that for the time bei g looked more peremptory,—always laying unction to my sc ıl that I may soon find more suitable time yet to sit to wr e what I promised to my esteemed friend. Mr Pillai pı - bably despaired of my promised article, and naturally s t to prepare a reply of his own. And by the time I h: l completed this dissertation, I heard that his reply w s at the "Sendamil" office for publication. I was glad I wou l be relived and wrote to Mr. Pillai accordingly to be excus l from publishing mine, as his own reply was on the eve f publication. He sent for my manuscript, and returned ; with a mandate that it should be given to the publi . In his letter dated 25—4—17, he wrote to me "Your pap on 'வருசி' is simply superb. You have taken a lot of troub over it. I insist on your publishing it. Tamil country ca not afford to lose such a highly valuable paper, x x x x without yours, mine cannot be viewed as full" I had thu no alternative therefore before me but to send it to th press.

Sometime before my essay was ready for the pres the erudite scholar and laureate of the Sethu Samasthanan Pandit Mr R. Raghavayyangar was here on a lecturin tour. And in the course of a familiar chat among friend

he broached this question, and remarked that he thought he should change his views since he found Vanchi to be a sea-port town from some new evidence he recently came across with while ransacking a rare manuscript of some unpublished commentary upon Tholkappiam in the Sarasvati Vilasa Library in Tanjore. This encouraged me in no small degree to renew my effort in fulfilling my promise to Mr. Pillai of Tanjore. I should not omit to thank the Sangam authorities for their courtesy in allowing me to place this essay—first published in the "Sendamil"—also in this form before the Tamil Public.

Tuticorin,<br>30—5—17.

S. S. BHARATI.

---



கடவுள் துணை.

# வஞ்சிமாநகர் பேரூர்.

## முதற்பகுதி—முன்னுரை.

குடதிசைச்சேரர் கோநகர்வஞ்சி யாண்டையது? என்பது வினா. இதற்கு முத்திறக்கொள்கையோர் மூவேறுவிடைதருவராயினர்.

சிலப்பதிகாரத்திற்குரைவகுத்த ஆசிரியர் அடியார்க்குநல்லாரும், பெரியபுராணநூலுடையாரும்,மகாமகோபாத்தியாயர்ஸ்ரீசாமிநாதையரவர்களும், அடிப்பட்ட தமிழ்வழக்கு[illegible]ம் மலைநாட்டுத்தலைநகராம் வஞ்சியைக் கடலோரம் பேராற்றின்மேலதெனக்கொள்ப.(1)

காலஞ்சென்ற ஸ்ரீ கனகசபைப்பிள்ளையவர்கள், பின்வழக்கில் வஞ்சிக்குக் கருவூரெனவு மொருபெயருண்மைகொண்டும், குடமலைத் தொடரினடிவாரத்திற் பேரியாற்றங்கரையில் ஒரு பாழூருக்குத் திருக் கரூர் என்னும் பெயருண்மைகொண்டும், அப்பாழூரையே சேரர் பேரூராக் கருதினர்.(2)

சமீபத்தில் வெளிவந்த "சேரன்-செங்குட்டுவன்" என்னுஞ் சரித நூலாரோ, இவையிருகூற்றும் "கொள்வதற்குப் பொருத்தமும் பிரமாணமும் இல்லை" எனவும், வஞ்சி யென்பது திருச்சிராப்பள்ளிக்கு மேற்கே ஆம்பிராவதிக்கரைமேலதாய 'கருவூரானிலை'யாமெனவும், வற்புறுத்துவர்.(3)

---

(1) சிலப்பு பக்கம் 18, 66. பெரியபுராணம் சேரமான் செய்யுள் 1, 2, 4, 45 to 47. வெள்ளானை செய்யுள் 3, 22. மணிமேகலை பக்கம் 190, 191.

(2)

(3) சேரன் செங்குட்டுவன் வஞ்சிமாநகரப்பகுதி

*

இம் முத்திறக்கொள்கையுள்ளு மொன்றேமுந்து நூன்முடிட கொத்ததாகும் என்பதொருதலை. எனவே, அஃதாமாறென்னை? வஞ் நகரொன்றோ? பலவோ? ஒன்றெனின், அது மலைநாட்டதோ? அ திப் புனனாட்டுரேயோ ? என்றவாராய்ச்சி நிகழ்வதியல்பாம்.

முதற்கண், இவ்வூர்சுட்டிய சில பெரும்பழநூலருந்தொடர்கள் யுய்த்து நோக்கலேற்புடைத்து.

(1) "தண்பொருனைப்புனற்பாயும்
விண்பொருபுகழ்விறல்வஞ்சி" (புறம் 11.)

(2) "நெடுதே
வஞ்சிப்புறமதிலலைக்கும்
கல்லென்பொருநைமணலினும்" (புறம் 387.)

(3) "தண்பொருநை, சூழ்தரும்வஞ்சியார்கோமான்"(சிலப்பு காதை 29.)

(4) "கலிகெழுவஞ்சியுமொலிபுனற்புகாரும்"(சிலப்பு காதை 8.)

(5) "குட்டுவன், வருபுனல்வாயில்வஞ்சியும்" (பத்து-)

(6) "புரிந்தயானிப்பூங்கொடிப்பெயர்ப்படூஉந்
திருந்தியநன்னகர்சேர்ந்ததுகேளாய்"(மணிமேகலைகாதை28 வரி101,102

(7) "செங்குட்டுவனெனுஞ்செங்கோல்வேந்தன்
பூத்தவஞ்சிபூவாவஞ்சியில்
போர்த்தொழிற்றானைகுஞ்சியிற்புனைய"(ஷை காதை 26 வரி 77, 78, 79

(8) "சேரன்
விற்றிறல்வெய்யோன்றன்புகழ்விளங்கப்
பொற்கொடிப்பெயர்ப்படூஉம்பொன்னகர்பொலிந்தனள்"(ஷை காதை 2
வரி 92

இன்னும்,

"வானவன்வஞ்சி"
"பூவாவஞ்சி"
"வாடாவஞ்சி"
"பொற்கொடிவஞ்சியில்"
"வஞ்சியிலிருந்துவஞ்சிசூடி"
"பூங்கொடிவஞ்சிமாநகர்"

எனவும்வருவன பண்டைநூல்களிற் பலவிடத்தும் பரக்கக்காணலாட பின்னும்

"வஞ்சியகநகர்வாய்"
"மதிதங்கியமஞ்சணியிஞ்சிவஞ்சி"

எனப் பெரியபுராணத்தும்வந்துள.

இவையன்ன அச்சிட்டு வெளியான பழநூல்கள் பலவற்றுள்ளும், சேரர் பேரூருக்கு வஞ்சியென்பதன்றி, கருவூர் என்னும் பெயர் வர யாண்டுங்கண்டிலம். ஸ்ரீ இராகவையங்காரவர்கள் தங்களாராய்ச்சியி லெடுத்தாண்டுள

"கோதை
திருமாவியனகர்க்கருவூர்முன்றுறைத்
தெண்ணீருயர்கரைகுவைஇய
தண்ஆன்பொருநைமணலினும்பலவே" (அகம் 93.)

என்னுஞ் செய்யுளையறிவேம். அதுபற்றிக் கீழேவிரித்துரைப்பேம். தற்போது, வெளிப்பட்ட பழநூலொன்றேனும் வஞ்சியுங் கருவூரு மொன்றென விதந்துகூறக்காண்கின்றிலம். இதுவரை, அடிப்பட்ட பழைய நூல்களிற்கண்ட மேற்கோள்களாற் கிடைக்கப்பெறுவன:—

(i) சேரர்கோநகர்வஞ்சி.

(ii) அது பொருநைக்கரைமேலது.

என்னுமிரண்டே. இவை நிற்க.

இனி: "வஞ்சுளாரணியம், வஞ்சி கருவூ"ரெனவும், "பொற்புமலி யாம்பிரவதியான்பொருநையெனவும்புகலுவரால்," எனவும், "செய்த வன் பெயர்முதலிய வரலா"றென்றுமேயறியப்படாத தற்காலக் கருவூர் ஸ்தலபுராண பிரமாணத்தையும், சோணாட்டுக்கருவூர்ப் பெருமாள் கோயிற் கற்சாசனத்தொன்றில் "வஞ்சி........ஸ்ரீவைஷ்ணவரோம்," என்னுந்தொடர்கண்டதையுங்கொண்டிக்கருவூரே வஞ்சியெனவும், அதனருகோடு மாம்பிராவதியே பொருநையெனவும் துணிந்த ஸ்ரீஇராக வையங்காரவர்கள், பின் தங்கருத்தை வலியுறுத்தச் சில பல தடை விடைகளுமெடுத்தாண்டுள்ளார்கள். அவையிற்றின்வலியும் தகவுடை மையுமொருதலையாத்துணியக்கிடப்பின், அவர்கள் கொள்கையையே முடிந்த துணிபாகக்கொள்ளுவதிற் சிறிதுமாட்சேபமில்லை. எனில், முறையே அவற்றையுற்றுநோக்க, அடிப்பட்ட பழவழக்கேவலிபெற்று, ஐயங்காரவர்கள்கருத்து நலிவதாக்காணப்படுகின்றது: அரிய ஆராய்ச் சித்திறம் பலவிடத்தும் காட்டிச்செல்லும் "சேரன்செங்குட்டுவன்," என்னுமினியபுத்தகத்தில், "வஞ்சிமாநகரம்" என்னுந் தலைப்பெயர் கொண்டபகுதியில், கருவூரானிலையே வஞ்சியெனத் துணிவதற்குக் காட்டியகாரணங்களை முறையே சிறிதாராய்வாம்.

---

## 2-ம் பகுதி. வஞ்சி வஞ்சுளாரணியமா?

முதலில், "வஞ்சுளாரணியம் வஞ்சி கருவூர்" என்னு மிக்கால கருவூர்ப்புராணச்செய்யுளும், கருவூரானிலையருகே 'வஞ்சியம்மன் 'வஞ்சுளேச்சுரலிங்கம்,' என்னுந் தெய்வப்பெயர்கள் வழங்குவது காட்டி, இதனால், "இக்கருவூரே 'வஞ்சி' யெனத்தமிழிலும், 'வஞ்சுள ரணிய'மென வடமொழியிலும் வழங்கப்படுவதாம்,"(1) என்றார்கள் சேரர் பேரூராம் வஞ்சிக்குக் 'கருவூர்'எனு மறுபெயர் பண்டைவழக் லுண்டோவென்னுமாராய்ச்சி நிற்க, எனைத்துவகையானும் வடமொ 'வஞ்சுளாரணியம்,' தமிழ்வஞ்சியாகாதென்பது வெளிப்படை. 'வ சுளம்' என்னும் வடசொல்லுக்கு, 'அசோகமரம்' (Uvaria) என் பொருள். செங்குட்டுவன் சரிதநூலார், "வஞ்சுளாரணியம்," "வ சுளாடவி" என்னுங் கருவூரானிலை," "வஞ்சி(அசோக)மரம் நிறைந் காடாதலின், இப்பெயர்பெற்றதென்பர்."(2) வஞ்சி என்னுந் தமி மொழியோ கொடிப்பெயரேயன்றி யாண்டும் மரப்பெயராகாமை உய் துணரத்தக்கது. அன்றியும், சேரர்கோநகரை, "பூங்கொடிப்பெயர் படீஉந்திருந்தியநன்னகர்" என்றும், "பொற்கொடிவஞ்சி" என்றுப் "பூங்கொடிவஞ்சிமாநகர்" என்றும், "பொற்கொடிப்பெயர்ப்படீஉ பொன்னகர்" என்றும், "பொற்கொடிமூதூர்" என்றும்,(3) கடைச்ச க்ப்புலவரும், செங்குட்டுவன்காலத்தவருமான சாத்தனார் தம் மணிமே கலையில் விதந்துகூறியுள்ளார். இவ்வாறு, குட்டுவர்கோநகர் வஞ் யெனும் வல்லியின் தனித்தமிழ்ப்பெயர்கொண்டதெனப் பண்டைநூ கூறுவதுணர்ந்துவைத்தும், அதற்கெட்டுணையும்பொருத்தமின்றி தமிழறிந்த ஐயங்காரவர்கள் நேற்றெழுந்தவோரநாமதேயியின்பாட்டை யாதாரமாக்கொண்டு, வஞ்சுளாரணியமே தமிழில் வஞ்சியெனமருவி றெனக்கூறியது மிக வியப்பைத்தருமன்றோ?

ஆரியர்வந்து கருவூரானிலையை வஞ்சுளாரணியக்ஷேத்திரமாக பிரதிஷ்டித்துக்கொள்ளுமுன்னர்ச் சேரருக்குத் தலைநகரில்லையோ லுப் உண்டேல், அக்காலத்தமிழ்ப்பேர்தான் யாதோ? மிகப்பழந்தமிழ்ந லெல்லாம் மலைநாட்டுக்கோநகரை வஞ்சியென்றே கூறக்காண்கின்றோப்

(1) பக்கம் 121.

(2) பக்கம் 121 அடிக்குறிப்பு.

(3) மணிமேகலை பதிகம் வரி86 காதை21 வரி91 26-92 28-101,102,17(

ஆனால், பாண்டவருக்குப் பல்லாயிரமாண்டுகளுக்குமுன்னரே வான் மீகரறிந்த கபாடபுரத்திருந்து செங்கோலோச்சி, பாணினிக்குமுன் தொல்காப்பியமியற்றுவித்துப் ‘பழையன்’ என்னுங் காரணவியற் பெயருமுடையபாண்டியன் கோமுதுகுடியையே, ஓசை ஒற்றுமை ஒன்றுகண்டு, பின்னூழியிறுதியிற்பொருத பாண்டவரி லொருவன் மணலியூர்க்கிளைப்பாண்டியன்மகளைமணந்த கதைகொண்டு, பாண்டவர் வமிசத்துப்பிறந்ததால் பாண்டியர்குலமாயிற்றென வாய்கூசாது கூறிய வர்களுக்கு, கொடிப்பெயரை மரப்பெயராக்கி வடமொழிக்கு வாகை சூடுவதருமையாமா? பாண்டவரென்பதே தத்திதாந்தநாமம்: பாண்டு புத்திரர் என்பதுபொருள். இனி யிதினின்று பிறிதொருதத்திதாந்த நாமம்பிறக்குமென்பது வடமொழிவழக்காமோ வில்லையோதெரிகிலேம். மனுவழிப்பிறந்தாரெல்லாம் மானவராவதன்றி, ஒரு மானவன்பின்னோ ருக்கு அப்புனைவுப்பெயரைத்திரித்து அதனடியாக வொரு புதுப்பெயர் தரும்வழக்கறியேம். மானவரெல்லாம், மனுவமிசத்தாராவதுபோல, “பாண்டிய”ரென்பது வடமொழித்தத்திதாந்தப்பெயராமாகில், பாண் டியரெல்லாம் பாண்டுபுத்திரரேயாகவேண்டும். பாண்டவன் என்று பற்குனனுக்கு இயற்பெயருமில்லை. அன்றியும், பாண்டவரிலிருந்து பாண்டியர் என்பது பிறக்கும் வடமொழிவிதிதானென்னையோ? இஃ திடைப்பிறவரல்: எனினும், ஐயங்காரவர்கள் ஆராய்ச்சிமுறை யிவ்வா றே யா சை யா சை யா னிடையிடையேயிழுக்கப்பட்டிடர்ப்படுவதை யினிதுணர்த்துதல்பற்றி ஈண்டுக்குறிக்கப்பட்டதன்றி வேறில்லை.

இவ்வாறே வஞ்சுளேச்சுரலிங்கம் என்று கருவூரருகேவிளங்கும்தெய் வப்பெயரும், அசோகடிமுளைத்த இலிங்கமெனக் காரணப்பெயராய் வடமொழியடியாகப் பிறந்ததாதலா லதற்கும் வஞ்சிக்கு மெனைத்தே னுந்தொடர்பில்லை யென்பதும் தெளிவாகும். இப்பெயர் ஆண்டுவழங்கு தல்பற்றி வஞ்சிமூதூ ரிக்கருவூரானிலை யென்றுகொள்ளுவதுஆராய்ச்சி முறையாகாது. இனி, இக்கருவூருக்குத்தெற்கே நதிக்கரைத்துர்க்கா தேவி வஞ்சியம்மன் என்றழைக்கப்படுவதால், கருவூர் வஞ்சியாகுமென் பர். வஞ்சியென்னுந்தமிழ்ச்சொல், ஒரு பூங்கொடிக்கு மதன்சார்பாகச் சேரருக்கும் பெயராவதன்றி,தமிழகத்தே பெண்ணுக்கும்,தருமதேவ தைக்கும் பெயராய் வழங்குவதுமுண்டு. எனவே, கருவூர்க்கருகுளார் தம்மூர்த்துர்க்கையை அறத்தெய்வமாக வழிபட விசேடக்குறிப்

பொன்றும் வேண்டார். அன்றி ஒருகால் இப்பெயர் செங்குட்டுவ
முதலில் வஞ்சியிற் கோவிலமைத்து விழவெடுக்கப்பட்ட பத்தினிக்
வுளுக்கேவுரியதெனினும் இதனாற் கருவூரானிலை வஞ்சிநகராகக் கரு
படவேண்டிய அவசியம் புலப்படவில்லை. இவ்வஞ்சித்தெய்வத்தி
இலங்கைமுதலிய பிறநாட்டரசரும், சோழபாண்டியரும் தத்தம் ந
டிற் கோவினூட்டி விழவெடுத்து வழிபட்டாரெனச் சிலப்பதிகாரவ
லாகத்தெரிவதோடு, தற்காலத்தும் கண்ணகிவழிபாடு பலவிடத்தி
பதையுங் காண்கின்றோம். ஆகையால் மலைநாட்டுத்தலைநகருக்கண
தில்லாக் கருவூரருகூராரும் வரதையானவஞ்சித்தெய்வத்தை வணங்
வதியல்பாகலாமே ? இதுகொண்டொரு பெருஞ்சரிதவாராய்
நிகழ்த்தி, கோவலன்மனைவி கோவிலுள்ளாங்கெல்லாம் மூதூர்முழும
மோந்திடலாமோ?

---

## ௩-ம் பகுதி. "கோதைதிருமாவியனகர்க்கருவூர்" பேரியாற்றின்மேல் "வஞ்சியகநகர்" ஆவதன்றி, ஆனிலைக்கருவூரன்றாம்.

இன்னுமிதுவேபோல், "தண்பொருநைப்புனற்பாயும் விண்பொ
புகழ்விறல்வஞ்சி" என்ற பேய்மகள்இளவெயினிபாட்டொடும், "த
பொருநை சூழ்தரும்வஞ்சியார்கோமான்" என்னுமடிகள் தொடர
டும், " பொற்புமலியாம்பிரவதியான்பொருனையெனவும்புகலுவரால்
என்னுங் கருவூர்ப்புராணச்செய்யுள்வரியையியைத்து, ஆம்பிராவதி
தண்பொருநையெனவும், கருவூரேவஞ்சியெனவும் சாதிக்கலாயின
முதலில், மூதூர்வஞ்சிக்குக்கருவூர் எனவு மோரியற்பெயர் பண்
வழக்கிலுண்டென்பதொருதலையாத் துணியப்படாததாகும். ஐயங்
ரவர்கள்காட்டிய வெளிப்படா அகப்பாட்டொன்றொழிய விதுகாறும
சேறிவெளிப்போந்த முன்னூல் மூலங்களில், சேரர்பேரூரை வஞ்
யெனக் காண்பதல்லால் யாண்டுங் கருவூரென்றழைக்கக் காணே
புறநானூறு, பத்துப்பாட்டு, மணிமேகலை, சிலப்பதிகாரம், பதிற்று
பத்து, ஐங்குறுநூறு, முதலியபழநூல்களில் இவ்வஞ்சிகுறித்த ப
விடங்களையு மேலேகாட்டியுள்ளோம். அகப்பாட்டடிகளையுஞ் சி
தாழநோக்கில், 'கருவூ'ரென்பதியற்பெயராகாமல், புலவன்புனைந்துரை
யாகலாமெனவுந்தோற்றுகிறது. அற்றேல், அதுபெரியவூர் (கருமை=

பெருமை) எனப் பொருள்படநிற்கும். அன்றியுமிக்கவியில், "கருவூர் முன்றுறைமணலே" விசேடிக்கப்படுவதால், வஞ்சியகநகரொழித் தாற்று வாய்த்துறையையே நுதலிற்றெனல் பொருத்தமாகும். கடற்கரைப் பேரூரெல்லாம், அலைவாய்ப்பாக்கம், அகவூர்ப்பாக்கமெனப் பிரிபடுவதி யல்பு. சிலப்பதிகாரத்தும் புகாரை மருவூர்ப்பாக்கமும், பட்டினப் பாக்கமுமெனப் பிரித்துக்கூறப்பட்டிருத்தல் நோக்கற்பாற்று.(i) இது வேபோல், வஞ்சியும் பேராறு கடலொடுகலக்குமிடத்ததாகவே, அவ் வாற்றின் வாய்த்துறைவேறு, உண்ணகர் வேறாகவேண்டும். ஆகவே, வஞ்சியகநகர் கருவூரும், முன்றுறைப்பட்டினம் முசுறி அல்லது மகோ தையுமாம்போலும். இதுகொண்டே மணிமேகலை சிலப்பதிகார நூலுடையாரும், இவ் "வானவன்வஞ்சியை," குணவாயிற் "புறக்குடி யும்," அரசன்புரிசையமைந்த அகவூர்ப்பாக்கமாம் "வஞ்சிமுற்ற" மென் னும் "இடைநிலைவரைப்பும்," இப் "பேரிசைவஞ்சிப்புறத்து" க் "கொடி மதின்மூதூர்க்குடக்கண்" கடற்கரைத்துறைமுகமாம் "முழங்குநீர்வேலி மூதூ" ரும், என்றித்திறத்தவாய்ப்பிரித்தே வருணித்துள்ளார்.(ii) இன்னும் பெரியபுராணமுடையாரு மிவ்வூரை 'வஞ்சியகநகர்' வேறு, வேலைமிசை "மகோதை" த்துறை வேறாகப்பிரித்துக்காட்டியுமுள் ளார்.(iii) பேரியாற்றின்முகம் மிகவிரிந்து, அலையொடுசமனிலையாகத் தணிந்து, ஆற்றுவாயெனத்தோற்றாது கலந்து கடலேயாதல் கொண் டதற்கலிமுகமென்றே பெயருண்டு. இதை அக்காலத்து யவனவணிகர் குறித்திதற்கு(Psudostomos)(iv) பொய்முகமென்றே தங்கள் கிரேக்க மொழியிலும் பெயர்வைத்திருத்தல் கவனிக்கத்தக்கது. இத்தகைய வாணிபத்துறைமுகமே முன்றுறையாகும். அத்துறைமணலைக் குறிக் கும்புலவன், 'மேடான அகநகர்க்கு முன்றுறையில் அலிமுகமாகப் பெருகும் பொருநைக்கரைமணலெ'னத் தோற்றுவாய்செய்து, "கோதைத்திருமாவியனகர்க்கருவூர் முன்றுறைத்தெண்ணீருயர்கரைக் குவையியதண்ணாந்பொருநைமணல்" என்று பாடினர்போலும். ஈண்டு, 'கருவூர்' என்பது மேட்டூர் அல்லது நடுவூர் என்று பொருள்படுவதாகும்.

---

(i) இந்திரவிழவூர்க்காதை 7-58.

(ii) சிலப்புகாதை 25 வரி 9, காதை 28 வரி 196, 206, மணிமேகலை காதை 28 வரி 4 24-164.

(iii) சேரமான்புராணம் செய்யுள் 1, 4, 46.

ஆகவே, அலைவாய்ப்பாக்கத்தினும், மேடான நடுவூராம் அர
"கொடிமதின்மூதூ"ராகிய இவ்வஞ்சிமுற்றம் அல்லது வஞ்சைக்க
திற்கே 'கருவூரெ'னவு மொருகாரணப்பெயரமைந்திருக்கவேண்டுமெ
பது மிகப் பொருத்தமுடையதாகும். மணிமேகலையி லிப் "பொற்கெ
மூதூர்ப்புரிசை"யை(1) "இடைநிலைவரை"(1)ப்பெனச் சுட்டியிரு
தும் இக்கருத்தையே வலியுறுத்துகின்றது(2). இவ்வகப்பாட்டுக் '
வூர்முன்றுறைமணல்," வஞ்சியகவூராம் 'கருவூர்' என்னும் 'வஞ்ச
களத்'தின் முன்றுறைமகோதைப்பட்டினக் "குண்டுநீரடைகரைவே
வாலுகமே"(3) யென்பதைச்சுட்டும் சில மணிமேகலை சிலப்பதிக
சான்றுகளுமீண்டுக்கவனிக்கத்தக்கன.

சோணாட்டுக்கீழ்கடலில், காவிரிப்பட்டினத்திற்குத் தெற்கு
மணிபல்லவத்திலிருந்து, வடமேற்கே வஞ்சிக்குச்சென்ற மணிமேக
கண்ணகிகோயில்கொண்டிருந்த செங்குன்றமலையை வழியிற்கண
அக்கோயிற் பத்தினிக்கடவுளைவந்திப்பான் சிந்தித்திறங்கி, அன்னை
வலம்வந்து வழிபட்டு அவள்பால்வரம்பெற்று, மீண்டம்மலையினின்
மேற்கே வஞ்சிக்குவழிக்கொண்டவள், முதலில் வஞ்சிப்பேரூரின் ம
வாயிற்புறத்துள்ள சிறு "புறஞ்சேரி"யிற்புகுந்து, ஆங்கறவொழு
தமைந்துநின்ற பல சமயவாதிகளின் வேறுபட்டகொள்கைகளையு ப
கள் கூறக்கேட்டு, பின் தன் "தாயரோடு அறவணவடிகளைக்க
விரும்பி அப்புறஞ்சிறைறையைக்கடந்து," "இடைநிலைவரைப்பாம்"க
ரென்னுங் 'கொடிமதின்' 'வஞ்சிமுற்றத்'துள் நுழைந் தவ்வரசர்ப
பாக்கத்தழகு பலவுங்கண்டு மகிழ்ந்து, கடைசியாகப் 'பௌத்ததரும
ளைச் சொல்லுமுனிவர்களின் தவச்சாலைகணிறைந்த' அவ்வஞ்சி
குடவாயில் முன்றுறைப்பட்டினத்திற்சென்று, அங்கே 'தவஞ்செ
திருந்த மாசாத்துவானைப்பணிய அவன் "மாதவி அறவணவடிகள்
லாயினோர் காஞ்சிநகரத்திருப்பதாகவும், அவ்வூர்சென் றறஞ்செ
யெனவும்" சொல்ல, "மணிமேகலை யவனைவணங்கி," தானின்ற
"வஞ்சிநகரத்தின் மேற்றிசையினின்று மேலேயெழுந்து வடதிசைக்
சென்று, காஞ்சிநகரினடுவே யிறங்கி"னள் என்பது மணிமேகலை

---

(1) & (2) மணிமேகலைக்காதை 28 வரி 24, 170.

(3) சிலப்பு காதை 27 வரி 242.

கூறிய(1) சரித்திரம். மணிபல்லவத்திருந்து கண்ணகிகோயில்காணப் போவதாகப்புறப்பட்டு, மணிபல்லவத்திற்குவடமேற்கே அவள்கோயில் கொண்டுள்ள செங்குன்றத்திற்குச்சென்று, மீண்டுங் கிழக்கே வஞ்சி நோக்கிவந்ததாகக்கூறாமல், புறப்படும்பொழுதே, "வஞ்சியுட் செல்குவ னென்றந்தரத்தெழுந்த"(2) மணிமேகலை வஞ்சிக்குப்போகும்வழியிற் செங்குன்றிலிறங்கித் தாய்கோயிலிற்பணிந்து பிறகு வஞ்சிப்புறஞ்சேரி புகுந்ததாகத்தெரிவதாலும், இவ்வாறு செங்குன்றத்திற்குமேற்கே இவ்வஞ்சிப்புறவூரும், கருவூராமகவூரும், மகோதைப்பட்டினமும், ஒன்றற்குமேற்கொன்றாயடுத்துநின்ற வரிசைப்படி மணிமேகலை யவ்வோரூர் மூன்றுபாக்கங்க(3)ளையு முறையே சென்றுகண்டதாக் கூறப்படுதலானும், சேரர்வஞ்சி யிக்கடலருகே மகோதைவஞ்சைக்களமே யன்றிப் புனனாட்டிற் செங்குன்றமலைக்கு 300 மைலுக்குக்கிழக்கிலுள்ள சோழர்தொல்குடிக்கருவூ ரானிலையாகாதென்பது வலிபெறுகின்றது. இதனுலரசர்புரிசையமைந்த நடுவூர்ப்பாக்கமாம் வஞ்சிமுற்றத்திற்குக் கிழக்கே புறஞ்சேரிநோக்கி யொருவாயிலமைந்திருந்தாலு மது புறக்கடைவாயிலே யென்பதும், அம்மூதூரின் முக்கியவாயில் முன்றுறை நோக்கிய குடவாயிலே யென்பதும் போதருகின்றது: போதரவே, சுபதினத்தில்வடதிசைநோக்கிப்புறப்பட்டசெங்குட்டுவன்தானை வஞ்சிமுற்றத்தின் முன்றுறைக்கடல்நோக்கிய பிரதானமேற்குவாயில்வழியே தான் சென்றிருக்கவேண்டுமென்பதுந்தெளிவாகின்றது. இதனுற்றான் அடிகள், தம் தலைமயன் வடயாத்திரையி லவனுடனடந்தசேனையின் தலைத்தார் சேரநாட்டின் கீழெல்லையானமலைமுதுகுநெளியவேற, கூழைப்படைவஞ்சிமுற்றத்தின் முன்றுறைக்கடலினலைவிளிம்புசூழ் போத, நடுவணிகள் இக்கடல்மலைகளுக்கிடைநிலமதர்பட நடந்தன வென்றெழில்பட வருணித்துள்ளார். இப்பெரும்புலவர்தருஞ்சான்றிரண்டானும், மலைநாட்டுத்தலைநகரான வஞ்சிமூதூர்,-குணவாயிற் புறஞ்சிறை, 'இடைநிலைவரை'ப்பென்ற 'கருவூர்' அல்லது 'வஞ்சிமுற்றம்,'

---

(1) மணி காதைகள் 26, 27, 28.

(2) காதை 25 வரி 38, 39.

(3) பாக்கம்=ஓர் பேரூரின் சிறு பகுதி.

கூழை=கடையணி (Rearguard.)

குடவாயில் முன்றுறைவெண்மணலடைகரைப் பட்டினமாம் மகோ
எனு மிம்மூக்குடிப்பாக்கங்களாற்கூடிய பேரூரேயாமென்ப தையட
வற்புறுத்தப்படுகின்றது.

இஃதெவ்வாறாயினும், இவ்வகப்பாட்டுச்செய்யுளொன்
கொண்டு வஞ்சியே கருவூரானிலையெனச் சாதித்தல்கூடாதாம். "பி
பட்டசேரராஜதானியாகத்தெரிகின்ற இவ்வூரை (கொடுங்கோளூரை)
பழையவஞ்சி யல்லது கருவூரென்றுகொள்வதற்குச் சங்கநூற்பிரமா
மொன்றுமேகிடையாது......கொடுங்கோளூர் என்றபெயரே பழை
நூல்களுக்குச் சிறிதுந்தெரியாததொன்றாகும்....சேரராஜதானியாகி
வஞ்சியென்பது ஆம்பிராவதிக்கரையிலுள்ளகருவூரேயன்றிக் கொடு
காளூரேனும் திருவஞ்சைக்களமேனு மாகாவென்பதும்....பேரியோ
றங்கரைத்திருக்கருவூரைப் பழையவஞ்சியாகக்.......கொள்வதற்கு
பொருத்தமும் பிரமாணமுமில்லையென்பதும் நன்குவிளங்கத்தக்கன
என்று வரையறுத்துவாதிக்கும் ஐயங்காரவர்கள், கருவூரானிலே
வஞ்சியெனவும், ஆம்பிராவதியேபொருநைப் பேராறெனவுங்கொண்
தற்குக்கண்ட சங்கநூற்பிரமாணங்கள்தாம் யாவோ? கொடுங்கே
ளூரேவஞ்சியென வற்புறுத்திய பலநூற்றாண்டுகளுக்குமுன்னுள்
சேக்கிழார்வாக்கையும் அடியார்க்குநல்லாருரையையு மடிப்பட்டவ
காரமாகாவென நிராகரித்தவர்கள், நேற்றெழுந்த வொரநாமதேயயிலீ
கருவூர்க்கதைப்பாட்டை மேற்கோளாகக்கொள்வ தென்ன வியப்போ
இப்புராணம் எச்சங்கநூலோ? இப்பாட்டு எவ்வளவு பழையநூற்பி
மாணமாகுமோ? இனி, "திருவஞ்சைக்களமே" 'வஞ்சி'யென்பாரிரு
ரும் தமிழகம்போற்றும் நல்லாசிரியரும் பெரும்புலவருமாகவும், ஐய
காரவர்கள் இவரை ஒலி ஒற்றுமையொன்றேகொண் டிவ்வாறு த
மாறினரன்றி வேறு பிரமாணங்காட்டாமையா லிவருரை மறுக்க
பாற்றென்பர்களேல், இவர்கள்கூற் றிருவகையானு மிடர்ப்பட்டழியுட
"இக்கருவூரின் ஸ்தானத்தில் மலைநாட்டுக்கொடுங்கோளூர் சேரரா
தானியாகப் பின்னூல்கள் கூறப்படுதல் காணலா"மெனவும், கருவூ
சோணாட்டின் முக்கிய நகரங்களுள் ஒன்றாகச்செய்தி சாஸனங்களாலு
நூல்களாலுந் தெரிகின்றதெனவு மிவர்களே தம் புத்தகத்திலொத்து

கொள்கின்றார்கள்(1). எனவே, ஆசிரியர் அடியார்க்குநல்லார் மகாமகோபாத்தியாயரிவர்கள்கொள்கைக்குப் பிரமாணமுண்மைகண்டவராகின்றார்கள்; தம் துணிபுக்கோ கருவூர்ப்புராணப்பாட்டொன்றன்றி, "திருவானிலைக்கோயிலைப்பற்றிய தேவாரப்பதிகங்களிலேனும், அக்கோயிற்கண்ட சாஸனங்களிலேனும் வஞ்சியின் பழஞ்செய்தி சிறிதும் குறிக்கப்பட்டிருக்கவில்லை" என்று பரிபவப்படுவதல்லால், யாண்டும் யாதும் பிரமாணங்கண்டிலர்கள். ஸ்ரீ கனகசபைப்பிள்ளையவர்களின் "கொள்கைக்கு ஆதாரமாயிருப்பதெல்லாம், கருவூரென்றபெயரொற்றுமையொன்றைத்தவிர வேறுசாதனமில்லை: இங்ஙனம் பெயரொப்பொன்றையேகொண்டு நாம் ஒரு முடிவுபடுத்தல் எங்ஙனங்கூடும்?" என்றதனை யதுக்கியொதுக்குமையங்காரவர்கள் தம்துணிவுக்குக் கண்டதெல்லாம், பொருநைசூழ் 'வஞ்சி'-ஆம்பிராவதிமேல் "வஞ்சுளாடவி," "அகப்பாட்டுக்கருவூர்"-"தேவாரக்கருவூரானிலை," "புறப்பாட்டு ஆன்பொருநை"-கருவூர்ப்புராண "ஆன்பொருந்தம்," என்னும் பெயர்களுக்குள்ள வேகதேசவோசை யொப்பேயாகக்காண்கின்றோம். ஏகதேசவோசையொற்றுமை யென்றேம்; கனகசபைப்பிள்ளையவர்கள்கண்ட "கருவூர்" "பேராறு" என்னுமுழுப்பெயரொற்றுமையும் ஐயங்காரவர்களுக்குக் கிடைத்திலாமையானும், இவர்கள்கொண்ட வஞ்சுளாரணியம், கருவூரானிலை, ஆம்பிராவதி என்பன முறையே பழையவஞ்சி, கருவூர், ஆன்பொருந்தம் என்பவற்றிற்குச் சிறிது பிறிதிசைக்கும் வேற்றுமையுடைமையானும்.

ஐயங்காரவர்கள் புத்தகத்தில், தம்முடிபுக்காதரவாக, வஞ்சியிற் செங்குட்டுவன்வழிபட்ட சிவபெருமானாலயம் கருவூரில் "இப்போதுள்ள பசுபதீசுவரர்கோயிலேயாதல்வேண்டும்" எனுந் தம்மனுமானத்தையும், "காமதேனுவாகிய பசுவினாற்செய்யப்பட்ட ஆலயமாதலின் இதற்கு 'ஆனிலை' எனப்பெயர்வழங்கியதென்பர். இதுபற்றியே, இக் கோயிற் சிவபிரான் 'பசுபதீசுவரர்' எனப்பட்டார்" என்னும் பிற்காலப் புராணக்கதையையுங்காட்டி, அமையாது பின்னும் "இவ்வாலயம் 'கருவூர்த்திருவானிலை'எனத் தேவாரப்பாடல் பெற்றிருத்தலோடு சோழர்சாஸனங்கள் பல கொண்டதாகவுமுள" தென்றும், இங்ஙனம் கருவூர்க்கு 'ஆனிலை'யெனப் பெயரிருத்தல்போலவே, "அவ்வூரையடுத்

(1) பக்கம் 131.

துச்செல்லு மாம்பிராவதிக்கு ஆன்பொருந்தம் எனப் பெயர்வழங்குதல் ஈண்டுச்சிந்திக்கத்தக்கதெனவும்" வற்புறுத்துவாரானார்கள். "வஞ்சியிற் சேரன் வழிபட்ட சிவாலயம் கருவூரானிலை" யென்பதை ஐயங்காரவர்களனுமானமே யென்றேம்: மூவேந்தர் மூதூர்களிலுமுள்ள பல கோட்டங்களையு மவைவயிற்றின் வரலாறுகளையும் விரித்துரைக்குமிளங் கோவடிகள் காமதேனுக் கதைகூறினாரில்லை. சிலப்பதிகாரமுழுதிலும் 'ஆனிலை', 'கருவூர்', 'ஆம்பிராவதி'ப்பெயர்களேனும் வரக்காணோம். கதைபலவிளக்கிக் காதைகள்பெருக்கி, சிவபிரானை "ஆனேறுயர்த்தோன்," "தெண்ணீர்க்கரந்த செஞ்சடைக்கடவுள்," "நிலவுக் கதிர்முடித்த நீளிருஞ்சென்னி யுலகுபொதியுருவத்துயர்ந்தோன்" "பிறவாயாக்கைப் பெரியோன்கோயிலும்," "நுதல்விழிநாட்டத் திறையோன்கோயிலும்," எனப் பலபடப்புனைந்துபாடிய அடிகள், "பசுபதீசுரப்"பான்மையை யறவே மறந்தனர்போலும். "ஆனிலை" சுட்டிய தேவாரப்பாசுரங்களும்,சோழர் சாஸனங்களும் மூதூர்வஞ்சியை முழுவதுமறந்தன. இதற்கு மாறாக சேக்கிழாரோ, "சேவீற்றிருந்தார்"(i) திருவஞ்சைக்களமே "சேரர் குலக்கோமூதூ"ரென்பர்.(ii) சுந்தரரு மிவ்வஞ்சைக்களத்தையு மதன்துறையான மகோதையையுமே பாடியுள்ளார்.(iii) இவ்வாறிளங்கோவும், பிள்ளையாரும், சுந்தரரும், அடியார்க்கு நல்லாரும், சேக்கிழாரும், சாஸனச்சோழருமறந்த விவ்வருங் கதையெலா மொருங்குவந்து செங்குட்டுவன் சரிதநூலாரை நினைப்பூட்டி யவர்வாயுருவெடுக்கநேர்ந்தவிந்தைதானென்னே? ஐயங்காரவர்கள் கொண்டபடி ஆனிலையே "குட்டுவர் குலமுதற்கோயி"லாமாயின், அக் கோயிற்சாஸனமெலாஞ் சோழரேதரவு மொன்றேனுஞ் சேரரைச் சேராததென்னோ? இவை பல விரிப்பிற் பெருகுமென விடுப்பேம். பண்டைநூலறியாப்பட்டியெலாந்தலமாகி, தத்தமக்குப் புராணங்களமைத்துக்கொண்ட இடைக்காலமுதல், பாவலர்பலர் ஆரியப் பழங்கதைகளை வாரியிறைத்து, விரித்தும் திரித்தும், குறைத்தும் கூட்டியும், தத்தமாற்றலுக் கேற்றபடி கற்பனைக்காவியமலிவித்ததன்மை தெரிவாரெவரே யித்தலப்புராணக்கதைகொண் டொரு பழஞ்சரித முடிவுசெய்வார்?

(i) சேவீற்றிருந்தார்=விருஷபாரூடரான சிவபெருமான்.
(ii) சேரமானபுராணம் கவி(i)
(iii) தேவாரம், திருவஞ்சைக்களம் பதிகம்.

## ௪-ம் பகுதி. ஆனிலையருகாம்பிராவதி வஞ்சிசூழ் பொருநைதானா?

இவ்வஞ்சிசூழ்பொருநை, 'சிலப்பதிகாரமும்' 'பதிற்றுப்பத்தும்' புகழும் பேராறோ? அன்றி ஐயங்காரவர்கள்கூறியாங் காம்பிராவதியேயாமோ? ஆலத்தூர் கிழார் புறப்பாட்டும், (1) நக்கீரர் அகப்பாட்டு (2) மன்றி, சங்கநூல்களிற் பலவிடங்களிலுமிவ்வாறு 'தண்பொருநை' (3)—'தண்ணம்பொருநை'(3)—'தண்ணென்பொருநை'—(3) 'தண்ணார் பொருநை'(3) யெனவே வருவதன்றி, 'ஆன்பொருநை' யென வரக்காணாமை யீண்டுச்சிறிது கவனிக்கற்பாலது. ஐயங்காரவர்கள் கூறியாங்கு, இவ் வாம்பிராவதிக்குத் தெய்வப்பசுச்சம்பந்தமாக "ஆன்பொருநை" யென்றே காரணப்பெயரேற்படவும், இதனை யக்காலப்புலவர் பலரும் இவ்விசேடணக்குறிப்பொழித்துப் பாண்டியனாறோ வென்றையுற வாளா "பொருநை"யென்றேகூறக் காரணமுண்டோ? 'ஆன்பொருநை' என வந்த மேற்குறித்த விரண்டிடங்களிலுங்கூட, "தண்ணாந்பொருநை"(4) யென்றிருக்கக்காண்கின்றாம். இவை "தண்ணார்பொருநை,"—"தண்ணென் பொருநை"—"தண்ணம்பொருநை" என்பவற்றொன்றின் பாடபேதமாகலாமோ வெனுமையம் நிற்க. "ஆந் பொருநை" என்றபாடமே கொள்ளினும், அஃதாம்பிராவதிநதியாகா தென்பதெந்துணிபு. மேற்குறித்த காமதேனுக்கதை குறித்து, பதி-கருவூரானிலையானதேபோல், நதியும்-ஆன்பொருந்தமாயிற்றெனஐயங்காரவர்களே விளக்கியதை மேற்காட்டியுள்ளேம். ஆகவே, ஆம்பிராவதியின் மறுபெயரான ஆன்பொருந்தமென்பது, காமதேனு காரணமான புராணப்புனைபெயரேயாகுமென்பதொருதலை. இனி முன்னூல்கூறுஞ் சேரர் பேராறோ 'ஆந் பொருநை'எனத் தந்கரமெய்கொண்ட பெயரேயாகும். இதன் காரணமும் வெளிப்படை. செழியனை வையைத் துறைவனென்றும், சென்னியைப் பொன்னித்துறைவனென்றுமழைப்பதேபோற் சேரனைப் பொருநைத்துறைவனென்பது பண்டைவழக்காம். எனவே, பொருநை, பொறையருக் கேற்புடைப்பேராறாகும். ஆகவே, கொற்கையிற்சங்கமிக்கும் பாண்டியன் 'பொருநை'யினின்று மிம்மலைநாட்டுப் 'பொருநை'யைப் பிரித்துக்காட்ட லவசியமேயன்றோ?

---

(1) புறம்-36. (2) அகம்-93. (3) புறம் 11, 387. சிலப்புகாதை 29, வரி-488. காதை 27-வரி 231. காதை-28 வரி-126. (4) புறம்-36.

இச் சேரர்பொருநை, மலைநாட்டாறுகையால், மலைநாட்டில் "இடவப் பாதி" (a) ச்சாரல்மழைகொண்டு ஆநிமாதத்திற்பெருக்கெடுக்கும் காரணம்பற்றி, ஐயங்காரவர்களே காட்டியுள்ளபடி, 'ஆநி' என்னுமொரு மறுபெயருங்கொண்டுளது.(i) ஆகவே, ஆன்றசான்றோரிதனை, 'ஆநி' யாகிய 'பொருநை' என்பது குறித்து, "ஆன்பொருநை" என்றார் போலும்.

எனைத்தேயாயினும், 'பசு'சம்பந்தமாகப் பிற்காலத்தெழுந்த 'ஆன் பொருந்த'ப்பெயரும், தந்நகர மெய்கொண்ட "ஆந் பொருநை" என் னும் பழையநூற் பெயரும் ஒன்றெனலாமோ? சமீபத்தில், தமிழ் வளர்க்கமுளைத்த சென்னைச் சர்வகலாசாலைச் சிறுகழகத்தொருவர்,ஒலி நுணுக்க விலக்கணங்களோராதே,தமிழில் வீணே வழங்கும்'ற-ர'"ழ-ள' 'ந-ன' எனு மோரொலி யிரட்டை யெழுத்துக்கள், தம்போற் றமிழபி மானப்புலவரை யிடர்ப்படுத்துவதாயும், அவற்றிலெவ்வொன்றே கொண்டு மற்றையதை, அடர்தளிரரிந்து செடிவளர்ப்பார்போல், காத லாற் களைந்தெறிவதே சௌகரியமு மொற்றுமைநயமு முதவுமெனவும் கூறிய அருமை யுபதேசத்தை மேற்கொண்டுய்ய முன்வருமபிமானிக ளைத்தவிரப் பிறிதெவரே, பொருளானு முருவானும் வரலாற்றானுமாறு பட்ட, விவ்விருவேறுபெயர்கொண்ட நதிகளிரண்டு மொன்றேயென் பார்?

---

(a) "இடவப்பாதி" என்பது மலையாளதேச வழக்கு; வைகாசிமாசத்தின் பிற்பகுதி என்று பொருள்.

(i) Note. "ஆநி"—இது கேட்டைமூலம் என்னும் நக்ஷத்திரங்களுக்கும், அவை காரணமாக ஒரு மாதத்திற்கும் பெயராயிற்று. ஒவ்வொருமாதப் பௌர ணமியோடுகூடிவருவதற்குரிய மூன்றுநக்ஷத்திரங்களுள் முதல்நக்ஷத்திரப் பெயரே அவ்வம்மாதப்பெயராகி, பன்னிரண்டுமாதங்களுக்கும் பெயரமைந்திருப் பது பிரசித்தம். ஆநித்திங்களில், பௌரணமித்திதியோடு சேர்ந்துவரும் நக்ஷத் திரம் மேற்குறித்த கேட்டைமூலம், என்பனவற்றொன்றாகும். இதனால், இவை யிற்றின்பெயரான 'ஆநி' என்பது அம் மாதப்பெயராய் நிற்றலும் வெளிப்படை. இப்பெயர் "வடமொழித்தொடர்புடையதாதும்: ஆகவே", தந்நகரமெய்யுடைய தாகும். மொழிநூனுணுக்கமுறைமுழுதுணர்ந்த வீரமாமுனிவரும் தம்மகராதி யில் இவ் 'ஆநி'க்கிளவிக்குத் தந்நகரமே புணர்த்தியமைத்திருப்பதீண்டுச்சிந்திக் கத்தக்கது. இனி, இம்மாதப்பெயர், 'ஆநியமழை' (South west monsoon)யால் அம் மாதத்தில் பெருக்கெடுக்கும் நதிக்கானது,இருமடியாகுபெயர்.

இன்னுமிவ்வாம்பிராவதி, "வஞ்சிப்புறமதிலலைக்கும் பொருநை" யாகாதென்றறிவிக்குஞ்சான்றுபல பிறவுங்காண்பாம். புனல்படுதுறைகளின்வளங்கமழ்கவிதருஞ்சம்பந்தர், கருவூரானிலைப்பதிகமுழுதினுமே, இவ்வூரை நதிமேற்பதியாகச்சுட்டினாரில்லை; ஆறிலாவூரே போற் பாடியுள்ளார். காவிரியும் ஆம்பிராவதியுங் கருவூரையொட்டாதெட்டியோடுமியல் பின்னுளதன்று, ஆளுடைப்பிள்ளையார் தங்காள்தொட்டேயுள்ளதென்பதுமிதனாற் போதரும். புறப்பாட்டில், "புறமதிலலைக்குந் தண்பொருநைப்புனற்பாயும் வஞ்சி"(1) யென இளவெயினி, குண்டுகட் பாலியாதன், எனுமிருபெரும்புலவர் தகவுரைகாண்பேமாதலால், பொருநையாறு (கருவூர்க்காம்பிராவதிபோற் சேய்மைத்தன்றி) வஞ்சியூர்தழுவியூட்டும் வேறுநதியேயாகவேண்டும். அன்றியும் ஐயங்காரவர்கள், "வராகமலையிலுற்பத்தியாகி மாமரச்சோலைவழியே செல்லுதலால்," ஆம்பிராவதிக்கு "சூதநதி" எனு மறுபெயருண்டெனவும், இவையிருபெயருங் காரணக்குறியெனவுங்காட்டினார்கள்.(2) இந்நதியே பொருநையாமாகில், இயற்கைநலநயந்து பன்மரச்சோலைவளமினிது விரிக்கு மிளங்கோவடிக ளிவ்விசேடணங்குறியாமை வியப்பாமன்றோ?

புனனாட்டாம்பிராவதியாறு "வஞ்சிசூழ்பொருநை" யன்றெனக் காட்டுங் குறிப்பின்னுமொன்றுளது. 'ஆநி,' 'ஆந்பொருந்தம்,' 'தண்பொருநை,' எனப்பலவாறழைக்கப்படும் "வஞ்சிப்புறமதிலலைக்கும் கல்லென்பொருநை" (3) க்கே—'வானி' எனவுமொரு பெயருண்டென, ஐயங்காரவர்களே எழுதியிருக்கின்றார்கள்.(4) இந்நதியையே, இளஞ்சேரலிரும்பொறையைப்பாடிய பெருங்குன்றூர் கிழார், "சாந்துவருவானிநீர்"(5)-எனவும், "தெண்கடன்முன்னியவெண்டலைச் செம்புனலொய்யுநீர்"(6)—எனவும், 'மாற்றருந்தெய்வத்துக் கூட்டமுன்னிய புனன்மலிபேரியாறு"(7)—எனவுஞ்சிறப்பித்துப் பாடியுள்ளார். இவ்விளஞ்சேரலிரும்பொறையை, மேற்குக்கடற்கரைத் தொண்டிப்பட்டினத்திருந்து மலைநாட்டையாண்ட சேரனெனவும், ஆனிலைக்கருவூருடையானன்றெனவும், ஐயங்காரவர்கள் விதந்துகூறியுள்ளார்கள்.(8)

---

(1) புறம் 11-387. (2) பக்கம் 120, 121. (3) புறம் 337. (4) பக்கம் 117. (5) பதிற்று 86. (6) ஷை 87. (7) ஷை 88. (8) பக்கம் 20.

இவ்வாறிம்மலைநாட்டு மேற்கடற்பட்டினத்தாண்ட சேரனைப்புகழுங் கால், அவனூட்டாறாகப் புகழ்ந்துபாடும்புலவர் புனலூட்டாறைப் பாடவியலாதன்றோ ? இவ ரிச்சேரலிரும்பொறையைப் புகழுங்கவி மூன்றினு மிவ்வாறு சுட்டியபகுதிகளை மேலேகாட்டினேம். இவைக ளால், இப்புலவர் இவ்விளஞ்சேரலிரும்பொறையின் மலைநாட்டாறொன் றையே, 'பேராறு' எனவும், 'வானிநீர்' எனவும், 'வெண்டலைச் செம் புனலொய்யுநீர்' எனவும், பலபடப்புகழ்ந்தனரென்பது தெளியப்படுகின் றது. இப்பேராறு, ஆம்பிராவதியல்லாத வொருமலைநாட்டாறென்ப தோ குட்டுவன்சரிதநூலினு மங்கீகரிக்கப்பட்டதொன்றும்.(1) இவ் வாறு, அயிரைமலைத்தொடரினின்றெழுந்து, மேற்குமுகமாயோடி, கொடுங்கோளூர்த்துறையில் மேலைக்கடலொடுசங்கமிக்கு மிப்பேராறே 'வானி'யென்று செங்குன்றூர்கிழார்பாடியிருப்பதாலும், இப்பேராறே இளங்கோவடிகளால் தந்தமையன் செங்குட்டுவனூறாகப் புகழப்பட்டி ருப்பதாலும், இப்பேராறும் வானியே 'வஞ்சிசூழ்' பொருநையாக ஸ்ரீ ஐயங்காரவர்களு மொப்புக்கொள்வதாலும், இப் பொருநை 'ஆனிலை'க் கருகோடுவதும், "தெண்கடன்முன்னுறு" காவிரியோடுகலக்குஞ்சிறு துணையாறுவதுமான 'ஆம்பிராவதி' நதியாகாதேன்பதை யிதனினும் விசதமாக்கவல்லதொரு பிறசான்றெதுவு மினிவேண்டப்படாதாகு மன்றோ ? ஆகவே, 'வானி' எனவும், பேராறெனவுமழைக்கப்படும் பொருநைநீர் "புறமதிலலைக்கும்" வஞ்சிமூதூரும், இவ்வானியாம் பேராற்றின் மேலதாகிய திருவஞ்சைக்களமாவதல்லால்,— புனலூட் டில், ஆம்பிராவதிக்கருகே, யாறெதுவுமே தீண்டாத வுண்ணாட்டூராகிய "ஆனிலைக்கருவூரா"காது—என்பதையுமிஃதொன்றே ஐயமறவலி யுறுத்துவதாகும்.

மேலும், ஆம்பிராவதி, காவிரியின் துணைநதியாய், புனலூட்டதா கின்றது. பொருநைத்துறைவரெனும்புனைவுப்பெயர்ப் பெருமிதங் கொள்ளு முடியுடைச்சேரருக்குத் தம் மலைநாட்டிற்பெரிதும்,கடல்வாய் யவனர் கப்பலேறும் பெருமைத்தும், பேராறெனவோரியற்பெயரே பூண்டதுமான ஆறிப்பொருநையும்—"தன்மலைப்பிறந்து தன்கடன்மண்டு

---

(1) பக்கம் 125.

மலிபுனல் நிகழ்தருந்தீநீர்" (i) நதம் (ii) பலவுமுளவாகவும், அவை யிழித்து, மாற்றரசருக்குரிய காவிரியிலொரு சிறுதுணையாறு பாடுவது வீறுதருமோ? "பத்தினிக்கடவுளைப்பரசல்வேண்டுமென...... மன்ன வன்விரும்பி நூலறிபுலவரைநோக்க, ஆங்கவர், ஒற்காமரபிற்பொதியி லன்றியும் விற்றலைக்கொண்ட வியன்பேரிமயத்துக் கற்கால்கொள்ளி னுங்கடவுளாகும், கங்கைப் பேர்யாற்றினுங் காவிரிப்புனலினுந்தங்கிய நீர்ப்படைதகவோவுடைத்தென்" றுரை, "பொதியிற்குன்றத்துக்கற் கால்கொண்டுமுதுநீர்க்காவிரிமுன்றுறைப்படுத்தல், மறத்தகைநெடுவா ளெங்குடிப்பிறந்தோர்க்குச்சிறப்பொடுவரூஉஞ்செய்கையோ? அன்று" (iii)—என்றுவெகுண்டசெங்குட்டுவன்குலச்செருக்கின் பெருமிதத்தை யடிகளினிது விளக்கியிருக்கக்கண்டுவைத்தும், தன்குடிப்பிறந்தார்க்கு மொவ்வாதெனவெறுக்குங் காவிரியின் துணைச்சிற்றாற்றின்றுறைநவ னென்றழைப்ப தவன்தருக்கும்புகழும் பெருக்கும்பெற்றித்தெனல் தகவுடைத்தோ? கருவூரானிலையே வஞ்சியாகில் அடுத்ததனருகோடுங் காவிரியி லெல்லைத்துப்பகுதியும் சேரர்க்குரியதோ? உரியசோழரை வென்றதகவன்றி, இயலுரிமைதனக்குண்டேற் செங்குட்டுவன், மேல் அடிகள் குறித்தபடி, காவிரியை வெறுப்பதியல்பாமா? உரிமையின் றேல், காவிரிக்கு இரண்டரைமைல்தூரத்தே கடல் மலை பேராறென்னு மிவையொன்றேனுஞ்சாராப்புனலூட்டொரூரைத் தந்தலைநகராச் சேரர்கொண்டமைதவியல்போ? பேரரசரூரெல்லாம், கடன்மேலாதல், மலைமிசையாதல், அலைதவழ்விரிபுனலாற்றின்வாயாதலமையக் காண் பாம். இம் முத்திறவியற்கையரணமு மிவைதருஞ்செவ்வியும் வளனும் பெறுவொரு கோநகர் காண்பதருமை.

---

(i) பதிற்றுப்பத்து செய்யுள் 48 வரி 13, 14.

(ii) நதம் = மேற்கோடும் ஆறு.

(iii) சிலப்பு காதை 25. வரிகள் 114—125.

## ௫-ம் பகுதி: கொங்குநாடு மலைநாடாமா?

ஐயங்காரவர்க ளிக்கருவூரைக் கொங்குநாட்டுத்தலங்களுளொன் றெனக்கூறியதறிவோம்:(i) ஆயினும், கருவூரைக்கொங்குநாட்டோராகக் கொண்டதற் கிவர்கள்கண்டபிரமாணமினைத்தெனக் காட்டிலர்கள். யாமறிந்தவரை, தேவாரப்பாசுரங்களை, பண்முறைப்பாகுபாட்டினுஞ் சிறிது பயனுறப்பண்ணநினைத்து, தலமுறையாத்தொகுத்துப் பதித் தோ ரதற்கெனவகுத்துக்கொண்ட முன்னட்டவணையில், "கொங்கு நாட்டுத்தலங்கள்" எனும் தலைப்பின்கீழ் இக்கருவூரானிலைப்பதிகத்தைப் பெய்துவைத்ததொன்றே யிக்கொள்கைக்கடிநந்தனமாய்நிற்பது. அட்ட வணைதொகுத்த அநாமதேயியினதிகாரமொன்றேவைத்து, கருவூரைப் புனனாட்டதாக ஆன்றபுலவருமடிப்பட்ட பழவழக்குங்கொண்டகொள் கையை மாற்றலாமோ? சேக்கிழார் பெரியபுராணத்தே ஆனிலைக் கருவூரை அநபாயசோழன் "சீர்மரபின் மாநகரமாகுந் தொன்னெடுங் கருவூரெனும்.........மூதூர்" (ii) எனவும், சோழர் "தங்கள் குலமர பின்முதற்றனிநகராங்கருவூரின்..........மருங்கணைவார்.........மகிழ் திருவானிலைக்கோயில்" (iii) எனவும், விதந்துகூறியுள்ளார். இவ்வாறு பெரியபுராணம் தந்துணிபொடு முரணுவதுகண்ட ஐயங்காரவர்கள், சரிதநூற்சார்புடைய விம்மேற்கோள்களைப் பொய்யெனவொதுக்கவே லாமைகண்டு, இக் கருவூரிடைக்காலத்தே சோழராதிக்கத்திற்குவந்து, சேரர் பழஞ்சார்புடைமை மறக்கப்பட்டிருக்கலாமெனவொரு அற்புதக் கற்பனைசெய்தமைந்தார்கள். இக் கருவூரானிலை முன் சேரனிடமிருந் ததற்கும், பிறகு அதனைச்சோழர்வென்று தந்தலைநகராக்கிக்கொண்ட தற்கும் ஐயங்காரவர்களுக்குக்கிடைத்த ஆதாரமறியேம். சங்கநூல்க ளோ? சாஸனங்களோ? தெரிகிலேம். அரும்பழநூல் பல இடை யிருட்காலத்திழந்துழலும் நம்மினு மிக்கருவூர்ச்சரித்திரவுண்மையை யிற்றைக்குச் சற்றேறக்குறைய எட்டு நூற்றுண்டுகளுக்கு முன்காலத் தவர் நன்கறியலாமென்பதிழுக்காதன்றோ? அக்காலத்தெழுந்த பெரிய புராணமுடையா ரிக்கருவூரைச் சோழருரென்றதோடமையாமல், மேற்காட்டியபடி யிருவேறுசோழர்வரலாற்றிடங்களி லவர்மரபின்வந் தார்க்கடிப்பட்ட தொன்னெடுந்தலைநகராகுமென் றிதிற்சோழராதிக்

(i) பக்கம் 120, 132. (ii) பெரியபுராணம் எரிபத்தர் செய்யுள் 2.
(iii) ஷை புகழ்ச்சோழர் செய்யுள் 11, 12.

கப்பழமையை வலியுறுத்தியுமுள்ளார். முறையே, இச் சோழர் சேக்கிழாருக்குச் சில பல நூற்றாண்டுகளுக்குமுன் இக் கருவூரிலாண்டவராவர். இப் புகழ்ச்சோழருக்கே யிக்கருவூர், "தங்கள் தொன்னெடுங் குலமரபின்வந்த முதற்றனிநகரா"மேல், இதிற் சோழராதிக்கந்தொடங்கியகாலம் செங்குட்டுவன்காலத்தொடு மிகநெருங்கினதும், சம்பந்தர் காலத்திற்கு முன்னதுமாயிருத்தல்வேண்டும். இச் சோழராதிக்கப் பழமையொன்றே, சேக்கிழாரிதனைத் தன்பாட்டிடைத்தலை வருக்கவர் குலமரபின் வந்ததொன்னெடுந்தனியூர் என்றதுடனேற்புடைத்தாகும். இவ்வாறன்றி, இக்கருவூர் சேரர்பேரூராயிருந்ததனைச் சோழரிடைக் காலத்து வென்றுகொண்டிருப்பரேல், அவ் வெற்றிதோன்றப் பாடு முறைவிடுத்து, அதை மறைத்து, தொன்றுதொட்டிதனை வளவர்குல பரம்பரையில்நின்றவூரென்றவர்புகழ்குறைத்துண்மையுந்திறம்பியிடர்ப் பட்டுச் சேக்கிழாரிழுக்கிவழுக்குவரோ? புறப்பாட்டிற் கிள்ளிவளவன், கருவூர்முற்றியிருந்தானை ஆலத்தூர்கிழார்பாடிய பாட்டறிவேம்.(i) அதுகொண் டிக்கருவூரானிலையைச் சோழர்முற்றியெடுத்து வெற்றிகொண்டகதை நிறுவலாகாதாம். என்னை? முதலில், "கருவூர்"என்னும்பெய ரிவ்வாலத்தூர்கிழார்பாட்டி லில்லை. தொகுத்த பிற்காலத்தவர் பெய்துவைத்த குறிப்பேயாகும். இரண்டாவது, பொருநை மிசைக்கருவூர் (வஞ்சி) இக் கருவூரானிலைதானென்பது பிறசான்றானுறுதிபெறுமுனிதனைத்தீர்ந்த முடிபாக்கொள்ளல்,ஐயமறுக்கும் விடையிறந்து வினவிரக்கும் வெற்றுரையேயாமன்றோ?

இவ்வாறிக்கருவூரைப் புனலூட்டுச்சோழர்முதூராக்கண்ட சேக்கிழாரே, "தொன்மைமலைநாட்டு"(iv)"மஞ்சணியிஞ்சிவஞ்சி"(v)ப் பழம்பதியில், "சேவீற்றிருந்தார்(ii) திருவஞ்சைக்களமு நிலவிச்(iii) சேரர்குலக்கோவான சேரமான்பெருமாள் "வீற்றிருந்துமுறைபுரியுங் குலக்கோமூதூர் கொடுங்கோளூரே"(iv)யாமெனவும் விளக்கியுள்ளார்.

---

(i) புறம் 36.

(ii) சேவீற்றிருந்தார்=விருஷபாரூடரான சிவபெருமான்.

(iii) நிலவி=பரவி; வழிபட்டு.

(iv) பெரியபுராணம்-சேரமான்-செய்யுள் 1.

(iv) வெள்ளானை செய்யுள் 22.

இத் திருவஞ்சைக்களத்தையு மதன் அலைவாய்த்துறையான மகோதை யையுமே சமயகுரவரிலொருவரான சுந்தரமூர்த்திகளும் பாடியிருப் பதை மேலேகாட்டினோம். இவ்வூர் பழையவஞ்சியன்றாமாகில், தமிழக வரைப்பிற் சிவஸ்தலங்கடோறுந் தேடிச்சென்று வழிபட்டு மனங்கசிந்து பாடுவதையே மேற்கொண்டொழுகிய சுந்தரர், செங்குட்டுவன்வழி பட்ட "பிறவாயாக்கைப்பெரியோன்" கோயிலைமறந்து, சேரர்வளநாட் டிற் பிற்காலத்தூரிவ்வொன்றனையே பாடியமைவரோ? என்பதுஞ் சிறிது சிந்திக்கத்தக்கதே. சுந்தரர்பாடியவிம்மலைநாட்டுக் "கடலங்கரை மேன்மகோதை"(i)யைச்சுட்டுங்கால், சேக்கிழார் "மலைநாட்டுப்பழம் பதி" யாந்திருவஞ்சைக்களத்துறையே "கோதையரசர் மகோதையெ னக்குலவுபெயருமுடைத்துலகில்" என விசதப்படுத்தியுமிருக்கின்றார்.

அன்றியும், பெரியபுராணத்தில், கருவூர்ச்சோழர் புனனாட்டுக் கும், வஞ்சிச்சேரர் வளநாட்டுக்குமிடையே பிறமன்னர் முறைசெய்யுங் கொங்குநாடொன்றுளதாகப் பன்முறை வற்புறுத்தப்பட்டுமுளது. இவ்விடைக் கொங்குநாடுண்மையு மதுபிறநாடாவதும் மலைநாட்டிளவர சர்பாடிய சிலப்பதிகாரத்தானுஞ் சேரர்வரலாறேகூறும் பதிற்றுப்பத் தானுமினிது விளங்கும்;(ii) இக்கொங்கரிடையிடையே சேரவீரர் சிலர்க்கிடைந்தாரை யவர்வென்று திறைகொண்டிருப்பினும், இக் கொங்குநாடு மலைநாட்டோடொன்றித் தன்னிலையிழந்திறவாத் தனி நாடாய் என்றும் நின்றதென்பதற்கு, தமிழகமும் வடநாடுமொருங்கு வென்ற தனிவீரன் குடக்கோச்செங்குட்டுவன் கோல்வளர்ந்தநாளும், வேற்செழியன் கண்ணகிக்கு விழவெடுத்து நாடுமலிய கோயுந்துன்ப மும் நீங்கியபோது, "அதுகேட்டுக் கொங்கிளங்கோசர் தங்கணாட்ட கத்து நங்கைக்குவிழவொடு சாந்திசெய்ய, மழைத்தொழிலென்றுமாறா தாயிற்று" என்னுமிளங்கோவடிகள் வாக்கும்(iii)—"மாகெழுகொங்கர் நாடகப்படுத்தவேல்கெழுதானை" (iv)ப்பல்யானைச்செல்கெழுகுட்டுவ னைப் பாலைக்கௌதமனார்பாடியபாட்டும்,—சோணாடுவிட்டு, "கொங்கு புறம்" படமலைநாட்டிற்சென்று, "குடபுலத்து"ள்ள சேரர் கருவூ

---

(i)சேரமான் புராணம் செய்யுள் 4.-தேவாரம்-திருவஞ்சைக்களம்பதிகம்.

(ii) சிலப்பு உரைபெறு கட்டுரை வரி 6; 25—153; 30—159; 29-2,3; பதிற்றுப்பத்து செய்யுள் 22, 77, 88, 90. (iii) சிலப்பு, உரைபெறுகட்டுரை வரி 6. (iv) பதிற்று 22.

றெறிந்து, வெற்றிபெற்ற "கொற்றவேந்தா"னை கிள்ளிவளவனைக் கோவூர் கிழார்பாடிய புறப்பாட்டுமே(i) போதியசான்றுமன்றோ? இவ்வாறே சேக்கிழாரும், வஞ்சிக்குச்சென்ற சுந்தரர்வழியும், வஞ்சிவிட்டுச் சோணாட்டிற்குவந்த சேரமான்வழியும், குறிக்குங்கால், இடையே இக்கொங்கர் பிறநாடுண்மையை மிக விசதப்படுத்தியுள்ளார்.(ii)

இன்னும் முன்னூல்களில் யாதோராதாரமுமின்றி, இக் "கருவூர் சோணாடு பாண்டிநாடுகளினெல்லையிலமைந்த"தென்று கூறிப்போந்த ஐயங்காரவர்களே, தன்னூலிற் கீழ்க்குறிப்பாக "கருவூர்க்குக்கீழ்பால், 8-மைலில், காவிரிக்கரையிலுள்ள மதுக்கரையைச் சேர சோழ பாண்டிய நாடுகளின் எல்லையாக இக்காலத்தாருங்கூறுவர்" என வோர்பொருப்பில்லார் பிரஸ்தாபவுரைகுறித்தமைந்ததன்றி, தன்மதமாகநூலுடன் இவ்வூரைச் சேரநாட்டகத்தேனு மருகேனுமுளதாக யாங்கணும் கூறத்துணியாமையும் பொருளுடைத்தன்றோ? இதுவேயுமன்றி, இவர்களே, சோணாட்டின் மேற்கெல்லை கருவூரென்பர், யாப்பருங்கலக் காரிகை உரைகாரர்" எனவொரு மேற்கோளுந்தந்துவைத்துள்ளார்கள். இவ்வாறிக்கருவூரானிலை, சோழர் பழவூரும் சோணாட்டு மேற்கெல்லையுமாக, அதன் மேற்கே கொங்கர்நாடுளதாக, மலையரசர் தலைநகரைத்தன்னாடுமுழுதும்விட்டு, நெடும்பிறநாடகன்றுவந்து, சோணாட்டேசமைத்தமைத வியல்பாமோ? சால்புடைத்தோ? மேலும், பாண்டியனைக் *கூடற்கோமான் - தென்னவனெனவும், †சோழனைக்கோழி - வேந்தன்-புனனாடனெனவும் புனைந்துரைப்பதேபோல், சேரனை 'வஞ்சி வேந்தன்' 'குடக்கோ'வென்றேகூறுவது வழக்காறுகும்.(iii) எனவே, கொங்கரன்ன குறுநிலமன்னர் பலரிருப்பினும், பொதுவாக "குமரி வேங்கடங் குணகுடகடலா மண்டிணிமருங்கிற்றண்டமிழ்வரைப்"(iv)

---

(i) புறம் 373.

(ii) சேரமான் 45, 47, 50, 140, 141, 164, 172 வெள்ளானை 4, 14, 22, 27, 28, 32.

* கூடல்=மதுரை.

† கோழி=உறையூர்.

(iii) சிலப்பு பக்கம் 463, 475, 484 மணிமேகலை பக்கம் 275, வரி 55.

(iv) சிலப்பதிகாரம் இறுதிக்கட்டுரை வரி 1—2.

பெலாம், குடமலைநாடு, குணபுனனாடு, தென்றமிழ்நாடென மும்முடி யரசர் குடைக்கீழடங்கும். இவ்வுண்மை, வேனிற்றெய்வமாகிய வசந்த னுலவியின்பஞ்செய்யும், வடவேங்கடந்தென்குமரிக்கிடையேகிடக்கும், தமிழ்நாடுமுழுவதையும் வரம்பறுக்கவந்த இளங்கோவடிகள், "நெடி யோன்குன்றமும் தொடியோள்பௌவமும் தமிழ்வரம்பறுத்த தண் புனனாட்டு, மாடமதுரையும் பீடாருறந்தையும் கலிகெழுவஞ்சியு"(i) மென முடிவேந்தர்மூவருரைமட்டுஞ்சொல்லி,அதனால் தமிழகவரைப்பு முற்று மமைத்துக்கொண்டதனாலும் விசதமாகும். இத்தகைப்பெருமை முத்தமிழ்நாட்டு முடிவேந்தருள், "குடதிசையாளுங் கொற்றங் குன்றா ஆரமார்பிற் சேரர்குலத்துதித்தோர்,"(ii) புனனாட்டொரு சிற் றார்பேணி, 'மயங்கி, விடுதலறியாவிருப்பினராகி, வடுநீங்குசிறப்பிற் றம்'(iii)வரைப்பெலாமறப்பரோ? இக் 'குடக்கோ'ப்பெயரால், சேரன், 'மேற்றிசைக் காவல்வீற்றிருப்பவ' னென்றறிவதேபோல், பின்னு மிவனுக்குள்ள 'பொறையன்,' 'மலையமான்,' 'பொருப்பன்,' 'வெற்பன்,' 'குடகன்,'(iv) 'குறிஞ்சிக்கோமான்,' எனும் பலபிற பிரபலகாரணவியற் பெயர்களானுமிவன் மேற்கடலடுத்த வளமலைநாடுடையா னென்பது வெள்ளிடைமலையாமன்றோ? சேரர், இத்தண்கடற்படப்பைநாடெலாந் துறந்து, செம்பியன்காவிரிச்சிறுதுணையாற்றினருகு ஆனிலையூரிருந்து வந்திடுவரோ? என்பதுஞ் சிந்திக்கத்தக்கதேயாம். இவை பலவானும், கருவூரானிலை புனனாட்டூரென்பதும்,வஞ்சி மலைநாட்டுப்பட்டின*மென் பதும், இவையிருநாடுகளுக்குமிடையே கொங்கர்பிறநாடு கிடக்கின்ற தென்பதும் தெளிவாம். இதுபற்றியன்றோ, இக் "குடதிசையாளுஞ் சேரர்குலத்துதித்தோர்க்"குரிய வஞ்சிமூதூரில் அ ர ச ன் புரிசை யமைந்த அகவூர்ப்பாக்கமாங் 'கருவூரைமுற்றியெடுத்த' சோழன்கிள்ளி வளவன் வெற்றிபாடிய கோவூர்கிழார் புறப்பாட்டிலும், இக் கருவூர் "குடபுலத்துவஞ்சிமுற்றம்"(v)என்றே சுட்டப்பட்டுளது.

---

(i) சிலப்பதிகாரம் வேனிற்காதை வரி 1—4.

(ii) சிலப்பதிகாரம் வஞ்சிக்காண்டக்கட்டுரை வரி 2—3.

(iii) சிலப்பு—அரங்கேற்றுகாதை 173 வரி 175.

(iv) குடகு=மேற்றொடரொரு மலை.

* பட்டினம்=கடற்கரையூர்.

(v) புறம் 373

## ௩-ம் பகுதி. "பூவிரிபுனலொருமூன்றுடன்கூடியகூடல்"— கருவூர்ப்புராணத் "திருமுக்கூடலன்று: முக்கடன்மணந்தகுமரிக்கூடலேயாம்.

இனி, செங்குட்டுவன்சரிதநூலில், "செங்குணக்கொழுகுங்கலுழி மலிர்நிறைக்காவிரியன்றியும், பூவிரிபுனலொருமூன்றுடன்கூடிய கூடலனை" (i) என்னும் பரணர்பாட்டைக்கொண்டு, வஞ்சியூர் மூன்றுயாறுகள் கூடுமிடத்திருக்க வேண்டுமெனவும்,—கருவூரானிலைக்கு வடகிழக்கே முக்கூடலுளதாக்கூறும் "வஞ்சுளாடவிக் குத்தரகுணக்காக வாம்பிராவதிநதி மதிபோல், விஞ்சுமாமணிமுத் தாறுகாவேரி மேவுழி மேவு மேவுதலா லெஞ்சலிறிருமுக் கூடலென்றிசைப்ப" (ii) என்னுங் கருவூர்ப்புராணச்செய்யுளைக்காட்டி, காவிரியுடன் தனித்தனிகலக்கும் ஆம்பிராவதி, மணிமுத்தாறு என்னு மூன்று நதிகளுக்கருகே கருவூரானிலையிருப்பதுகொண்டு வஞ்சி யிக்கருவூரேயாகுமெனவும்,—துணியப்படுகின்றது. (iii) வெளிவந்த பதிற்றுப்பத்துரையுடையார், இப்பரணர் பாட்டின்கீழ், "மூன்றுடன்கூடிய கூடலென்றது, அக்காவிரி தானும், ஆன்பொருநையும், குடவனாறுமென, இம்மூன்றும் சேரக்கூடியகூட்டம்" என்றுரைகண்டார். கருவூரானிலைக்கு வடகிழக்கே, சற்றேறக்குறைய $2\frac{1}{2}$-மைல் தூரத்தில், ஆம்பிராவதி காவிரியோடு கலக்கின்றது. குடவனாறோ கருவூருக்கு 12-மைலுக்குத் தென்கிழக்கே ஆம்பிராவதியிலேயே சங்கமமாகிவிடுகிறது. இவ்விடர்ப்பாடுகண்ட ஐயங்காரவர்களிவ்வுரை பரணர்பாட்டை வஞ்சிக்குப் பொருத்தமுடையதாகக் காட்டாதெனவிடுத்து, பொருந்துமாறு தாமோர் புத்துரைகொண்டார்கள். குடவனாற்றிடத்தில் மணிமுத்தாநதியை நிறுத்தி, பழையவுரையைச் சிறிதுதிருத்தி, "ஆம்பிராவதி, மணிமுத்தாநதி, காவேரி, மூன்றுங் கூடுந் திருமுக்கூடலை" (iv) யே பரணர்பாட்டுக்குறித்ததாகவைத்து, அதனால் வஞ்சி யிக்கருவூரானிலையாகுமென்றார்கள். எனில், "மணிமுத்தாநதி காவிரியொடுகலக்குமிடம் மேற்கே வெகுதூரத்துள்ளதா" க (iv) ஆம்பிராவதியொன்றே கருவூரானிலைக்கருகே (சுமார் $2\frac{1}{2}$-

(i) பதிற்று 50.

(ii) ஆம்பிராவதிச்சருக்கம் 45.

(iii) சேரன்செங்குட்டுவன்கதை பக்கம் 117, 122, 129.

(iv) "சேரன்-செங்குட்டுவன்" பக்கம் 122, 123 அடிக்குறிப்பு.

மைல் தூரத்தில்) காவிரியுடன் கலப்பதாகும். எனவே, ஈண்டும், "முக்கூட"லென்பது கற்பனையேயாயிற்று. இவ்வாறு தன்னுரையு மியற்கையொடு முரணுவதைக்கண்ட ஐயங்காரவர்கள், கொண்டதை விடாமல், "முற்காலத்தில் இந்நதி (மணிமுத்தாநதி) ஆன்பொருநை யுடன்சேர்ந்து காவிரியிற்சங்கமித்ததுபோலும்,"(iii) என்று ஏற்புழிக் கோடலோர்துணிபுதந்துரைத் தமைந்திகண்டார்கள். "முற்கால"மென்பது எனைத்தளவோ? வெருதொல்லைவேண்டாம். ஐயங்காரவர்களே கூறுகிறபடி "290- வருஷங்கட்கு முன்னியற்றப்பட்ட கருவூர்ப் புராணச்"(i) செய்யு ளிம்மூன்று நதிகளுமொருங்கேகலப்பதை யுள்ள வாறுகூறிற்றெனில், அப்படிக்கலந்தகாலம் சற்றேறக்குறைய 200- ஆண்டுகளுக்கு மேற்படாது. இத்துணைச்சிறுகாலத்தளவில் மணிமுத்தாறு மற்றிருநதிகளை நெடுந்தூரங்கடந்தேறிவந்து கலந்தவழியிழந்து, தன்னளவு குறுகி, முக்கூடலெட்டாது, கிட்டியாங்கொட்டி, மேற்கே முடிந்தநாள் விடிந்ததென்றோ? அவ்வாறு, இவ்வாறு, தன்னுறுமாற்றியதாகக்கொள்ளச் சரிதசாஸனவியற்கைச்சான்றெதுவுமுண்டோ? கிடைத்தசான்றுகொண்டு அவைகாட்டு முடிபுதுணிவதே யாராய்ச்சி முறையாகும்: அஃதன்றி, துணிந்த முடிவுக்கேற்றசான்று தேடுவது சரிதநூன்மரபாகாது.

இனி, இப்பரணர்பாட்டி னியைபுதானென்னை? "புனலொருமூன்றுடன் கூடியகடல்" என்னுந்தொடர், கருவூர்ப்புராணத் "திருமுக்கூடலை"யே குறித்ததென்றுகொள்வ தின்றியமையாததன்றே. காவிரி சோழனதாகவும், அதைச் செங்குட்டுவனுக்குவமித்தகாரணம்யாதோ? காவிரியாறு சேரனுடைமையாக்கூறும் பழநூலேனும் செய்யுளேனு மிதுகாறுங்கிடைத்திலது. எனினும், ஈண்டுப் பரணர் செங்குட்டுவன் பால் சோணாட்டுக்காவிரியை எடுத்தாளப் போதியகாரணமும் தகவுமுண்டு. செங்குட்டுவன் சோழரைவென்ற சரிதவுண்மைக்கேற்க, தோற்றவர்க்கேற்ற நதியைச்சொல்லி, பரணர், "வெந்திறலாரාச்செரு விற்சோழர்குடிக்குரியோர் ஒன்பதின்மர்வீழவாயிற்புறத்திறுத்த"(ii) குடக்கோச்சேரன் சேவகம் புகழ்வதானார். இஃது அக்காலப்புலவர்

(i) சேரன்-செங்குட்டுவன் பக்கம் 120 அடிக்குறிப்பு.

(ii) பதிற்றுப்பத்து 5-ம் பத்துப்பதிகம்.

மரபு. இதுகொண்டே, என்றும், யாண்டும் எனைத்தேனும் சேரருக்குக் காவிரியாறுடைமையேனும், காவிரி மேனாடுநகருண்மையேனும், துணிவதிழுக்காம். தெவ்வடுவெற்றியன்றி, மற்றெவ்வகையானுமுரிமையில்லாப் பிறநாட்டு நதிநகர்களைக்கொண்டு அவையுடையாரைப் போர்வென்றோரைப்புகழ்தல் பழமரபென்பது,—என்றும் சேரர் ஆண்டறியாப்புகார்குறித்து "இருபெருவேந்தரையு முடனிலைவென்ற ..............அருந்திறலொள்ளிசைப் பெருஞ்சேரலிரும்பொறையை மறுவில்வாய்மொழியரிசில்கிழார்"(i)பாடி, "காவிரிமண்டிய சேய்விரி வனப்பிற் புகாஅர்ச்செல்வ"(ii) என்றழைத்தலானும்,-சேரபாண்டியர்களுக்கேயுரிய வஞ்சி மதுரைகளைக்குறித்து, அவ்விருமுடிவேந்தரைச் சோழன்நலங்கிள்ளி போர்வென்றபெருமைதோன்ற அவன் தன்னரசுக்குரிமையில்லாப் "பூவாவஞ்சியுந்தருகுவனன்றோ?........மாடமதுரையுந்தருகுவனெல்லாம்,"(iii) என்றவனைக் கோவூர்கிழார்பாடிய புறப்பாட்டானும்,-"பெருஞ்சோழனையும்வென்று வஞ்சிமூதூர்தந்து பிறர்க்குதவிய........மன்னுயிர்காத்த மறுவில்செங்கோ லின்னிசை முரசினிளஞ்சேரலிரும்பொறை"யைப் பெருங்குன்றூர் கிழார்,(iv) "செழும்பலவிருந்த கொழும்பஃறண்பணைக் காவிரிப்படப்பை நன்னாடன்ன, வளங்கெழுகுடைச்சூ லடங்கியகொள்கை, யாறியகற்பிற் றேறியநல்லிசை வண்டார்கூந்த லொண்டொடிகணவ"(v)னென்று புனைந்துபாடிய வருமைப்பாட்டானும்,—இன்னமிவையன்ன பிற பல ஆன்றசான்றானுமினிதுவிளங்கும். இன்னும் பதிற்றுப்பத்தில், சோழரைப் போர்வென்றசேரர்மாட்டே யிவ்வாறு காவிரிபுனைந்துரைக்கப்படுவதும், அவ்வெற்றியில்லார்க் கிப்பெற்றிசொல்லாமையும், உற்றுநோக்கி லிப்பழவழக்கு மிகவுறுதிபெறுவதாகும். இதனால், மேற்குறித்த பரணர்பாடலுக்கு மிம்மரபுதோன்றப் பொருள்கோடலே யேற்புடைத்தாம்.

---

(i) பதிற்றுப்பத்து 8-ம்பதிகம்.

(ii) பதிற்று 73.

(iii) புறம் 32.

(iv) பதிற்றுப்பத்து 9-ம்பதிகம்.

(v) பதிற்றுப்பத்து 90

"காவிரியன்றியும் பூவிரிபுனலொரு மூன்றுடன்கூடிய கூடலனையை," என்பதுமூலம். இது சேரன்செங்குட்டுவன்மேலது. செங்குட்டுவனே சோழர் ஒன்பதின்மரைப்புறங்கண்டவன் என்று, பதிற்றுப்பத்தின் பரணர்ஐந்தாம்பத்துப்பதிகத்தாலறிவாம். இவ்வென்றிதோன்றச் செய்யுளிற் காவிரியை அவனுக்குவமித்தபரணர், அதுவேயுமன்றித் தன் பாட்டுடைத்தலைவன் பழையன்காக்குங்கருஞ்சினைவேம்பின் முரைமுழுமுதலறுமியப்பண்ணிய"(i) வெற்றியையும்நினைந்து, அது புனைந்துரைக்கக்கருதி, சோழர்மேல்வெற்றிதோன்றக் "காவிரி" என்றெடுத்தபுலவர், "அன்றியும்......புனலொருமூன்றுடன்கூடியகூடலனையை" என்றுமுடித்தார்போலும். குடகடல்முன்னரேதன்னதாக, முறையே சோழபாண்டியருக்குரிய குணதென்கடல்களையும் தன் வெற்றியாலுற்றதாக்கிக்கொண்ட செங்குட்டுவன் திறம்பாடும்புலவர், தெற்கே அம்முக்கூடல் கலக்கும்பெற்றியையும், ஆங்கம் முந்நீர்க்கூட்டத்தால் வலிமிகுந்தலைக்குங் குமரிப்பௌவத்தினேற்றத்தையுஞ் சுட்டி, "புனலொருமூன்றுடன்கூடியகூட்டமனையை" என்று கூட்டிமுடித்தார் என்பது மிகப்பொருத்தமன்றோ. இவ்வழக்குநோக்கியே,—பதிற்றுப் பத்துரைகாரரும், 3-ம் பத்துப்பதிகத்தின்கீழ், "இருகடனீரும் ஒருபகலாடி" என்றதற்கு, "இருகடலும் என்றது—தன்னதாய மேல்கடலும், பிறநாட்டதாய்ப் பின்பு தான் பொருதுகொண்டு தன்னுடாக்கிய (சோழ)நாட்டிற் கீழ்கடலும், என்றவாறு,"—என்றெழுதியுள்ளார். இதுவேபோல், 51-ம்செய்யுளில் சேரலாதனைப்பாடும் நச்செள்ளையாரும், "பெருந்தெய்வத்துவளைஞரலும்பனிப்பௌவத்துக், குணகுடகடலோடாயிடைமணந்த," என்று முக்கடலுங்காட்டிக் கூறிவைத்தார். இதைவிடுத்துக்காவிரியுடன் வெவ்வேறிடத்துக்கலக்குந்தனிப் பெருமையேலாச் சிறுநதி யிரண்டின் கூட்டத்தைக் குறிப்பதாகக் கொண்டு, இயல்பொடுமுரணிக் கவிச்சுவையுங்குறைப்பதல்லால், பெறுநயம்பிறிதொன்றுண்டோ?

இனி, இக்கவியின் 'முக்கூடல்' காவிரிமேலதாய "திருமுக்கூடலை"யே குறிக்குமெனக்கொள்ளினும், அஃதொன்றுபற்றி வஞ்சியதனருகுளதாகக் கருதற்கவசியமுண்டோ? மேற்கண்டாங்கு, காவிரிப்

---

பழையன் = பாண்டியன்.

(i) 5-ம்பத்துப்பதிகம்.

பூம்பட்டினத்தையும், மதுரையையும் சேரர்வீரம்பாடுவோர் உபசாரம் ஒன்றேபற்றி யவர்மேல்வைத்துப்பாடுவது மரபாமாகில், தன்னுடுபுகா மலும்,நகரனுகாமலுமோடுஞ்சோணாட்டாறுகளைச்சோழரொன்பதின் மரைவென்ற வீரரேறாகிய செங்குட்டுவனுக் குவமிப்பதிழுக்காமோ? இழுக்காதேல், இப்பாணர்பாட்டுவமையொன்றுகொண்டு, சேரர்தலை நக ரந்நதிகளுக்கணித்தெனச்சாதித்தலெப்படிக்கூடும் ? வஞ்சியொடு கடல்சேர்த்துப்பாணரும் இளங்கோவும் விதந்துபாடாமையால் வஞ்சி யுண்ணாட்டதென்று வாதிக்கும் செங்குட்டுவன்சரிதநூலார், இம்மூன் றாறுகளினணித்து வஞ்சியெனவிதந்தோது மேற்கோளொன்றுமின்றி யிவ்வுவமைகொண்டு தம் முடிபுநாட்டுவது சிறிது வியப்பைத்தருவ தன்றோ? இவர் தம் முடிபுக்கு வேறு தக்கமேற்கோளுஞ்சான்றுகளு முளவிடத் திவ்வுவமையை ஒருபுடைத்துணையாகக்காட்டியதன்றி யிதனைப் பிரமாணமாகக்கொள்ளவில்லையெனலாமெனின், தம் புத்தகத்தில், கொடுங்கோளூர்வஞ்சியென்பார்கூற்றைப் பலவாறு மறுப்பதல்லால், தாம் கருவூரானிலையே வஞ்சியென்றுகொண்டமுடிபுக்கு ஏகதேசப் பெயரொற்றுமைகளைத்தவிர வேறுயாதொரு நேர்சான்றும் காட்டின தாயுமில்லை.

---

## ௭-ம் பகுதி. வஞ்சிமூதூர் பட்டினமா ? உண்ணாட்டோ ?

இனி, "வஞ்சிமாநகரம் கடற்கரைக்கண்ணதாயின், சிலப்பதிகாரம் மணிமேகலை முதலிய முன்னூல்கள் அதன் கடல்வளச்சிறப்பால் வரு ணித்துக்கூறுமற்போகுமா? ஒருகாலுமில்லை. அங்ஙனம் கடற்கரைச் சம்பந்தம்வஞ்சிக்குக்கொஞ்சமும் காணப்படாமையே,அஃதுண்ணாட்டு நகரமென்பதை விசதமாக்கவல்லது," எனவும் விதந்தோதி, குட்டுவன் சரிதநூலார் தந்துணிபுவலியுறுத்துகின்றார்கள். முதலில் ஒருநூலி லொன்று சொல்லப்படாமைகொண்டு அதனையில்லையெனத் துணியத் தருக்கமிடந்தராது. இரண்டாவ திப்பழநூல்கள் முறையே கண்ணகி, மணிமேகலை யிவர்களின் வரலாறுகூறவந்தனவன்றி, வஞ்சிவருணனை கருதியவுமன்றும். எனவே இவைகளிற் பாட்டுடைத்தலைவரின் சரித நிகழ்ச்சிகூறிச்செல்லுமிடத் தவர்வரலாற்றுமுறைக்கேற்புடைய வரு ணனைகளைப்பெய்தமைப்பதன்றி, எல்லாவிடங்களிலு மெல்லாவற்றையு முலப்புறவருணிப்பதழகுமில்லை, அவசியமுமாகாதன்றோ? மூன்றுவது,

சிலப்பதிகாரத்திற்போல், மணிமேகலை நூலிற் காவிரிப்பட்டினத்தையும், கொற்கையையுமே கடல்வளச்சிறப்பால் வருணித்துக்கூறப்பட்டதாயில்லை.(i) இதனாலிவையிரண்டு முன்னாட்டூரென்பார்களோ? சிலப்பதிகாரத்தில் விசதமாகக்கொற்கைக்குக் கடனலங்கூறப்படவுமில்லை. அதுகொண் டிப்பழம்பதி பட்டினமன்றாமா?

இனிக்கடைசியாக, தொன்னூல்களிற் சிறிதாழத்துருவுவார்க்குக் 'கடற்கரைச்சம்பந்தம் வஞ்சிக்குக்கொஞ்சங்காண'வேபடுகின்றது.

சிறுபாணாற்றுப்படையில், சோழபாண்டியரின் உண்ணாட்டூர்களான உறையூர், மதுரைகளை, "செம்பியனோடாப்பூட்கையுறந்தையும்" எனவும், "செழியன்தமிழ்நிலைபெற்றதாங்கருமரபின், மகிழ்நனைமறுகின் மதுரையும்" எனவும், பாடிய நல்லூர்நத்தத்தனார்,—கொற்கை, வஞ்சி நகரங்களைக்குறிக்குங்கால், அவை கடற்கரைக்கழிமுகத்தூர்க(ii)ளெனச் சுட்டிப், "உமட்டியரீ(iii)ன்ற, கிளர்பூட்புதல்வரொடு கிலுகிலியாடுந் தத்துநீர்வரைப்பிற்கொற்கை" என்றும், அஃதேபோல் மலைநாட்டிற் குடகடலடைகரைவயல்வளநயந்து,

"கொழுமீன்குறையவொதுங்கிவள்ளிதழ்க்
கழுநீர்மேய்ந்தகயவாயெருமை,
பைங்கறிநிவந்தபலவினீழன்
மஞ்சண்மெல்லிலைமயிர்ப்புறந்தைவர,
விளையாவிளங்கணாறமெல்குபுபெயரா,
குளவிப்பள்ளிப்பாயல்கொள்ளுங்
குடபுலங்காவலர்மருமானொன்னார்
வடபுலவிமயத்துவாங்குவிற்பொறித்த
எழுவுறழ்திணிதோளியற்றேர்க்குட்டுவன்
வருபுனல்வாயில்வஞ்சியும்,"(iv)

---

(i) மணிமேகலை புகார்பற்றியது 9-53; 17-65, 25-16, 78 to 185, கொற்கை பற்றியது 13-84.

பட்டினம்=கடற்கரையூர் (Seaport).

(ii) கழிமுகம்=நதி கடலொடுகலக்குமிடம்(Ports at the river mouths)

(iii) உமட்டியர்=உப்பமைப்போர்பெண்டிர் (Women-folk of the professional Salt Manufacturers.)

(iv) சிறுபாண்வரி 41—50. கோடிட்டன மேலக்கடற்கரைவளனும், அக்கரைப்பேராற்றின் கழிமுகத்துறையாம்வஞ்சிநலமும் மலையிலக்காவிளக்கிநிற்பன.

என்றும் விதந்துகூறியுள்ளார். இஃதேபோல் நாடகக்காப்பியத்துள் இளங்கோவடிகளும் மூவேந்தர்மூதூர்களையுந் தொகுத்துரைப்பார், "மாடமதுரையும் பீடாருறந்தையும், கலிகெழுவஞ்சியு மொலிபுனற் புகாரு" (i) மென்று அவற்றினியல்பும் வளனுஞ் சுருங்கச்சொல்லி விளங்கவைத்தார். ஈண்டு உண்ணாட்டூர்களாகிய 'மதுரை', 'உறையூர்', களை யொருங்குவைத்து, அவற்றை 'மாடமலி, 'மதுரை'யெனவும், 'பீடுபெறுமுறந்தை'யெனவு மொருபுடையொப்ப வருணித்ததுமன்றி, அவற்றினின்றும் புகாரையும் வஞ்சியையும் பிரித்து, அவை தமக்கு முறையே யடைகொடுத்த அடைவேறுபுணர்த்திய குறிப்பின்செவ்வி மறக்கற்பாற்றோ? காவிரிப்பட்டினக் கடல்வளம்விரித்தோர், வஞ்சித் துறைநலம் வஞ்சிப்பானேன்? என்பார், அடிகள் நாடகக்காப்பி யத்தின் போக்கு மதனோக்கும், அவர் கதைநடத்துமுறையுஞ் சிறிது கவனிப்பாராக. கண்ணகிபிறந்தவள் பெண்ணலமுதிர்ந்து, மணவினை முடித்தவண் மனையறநடத்திய கோவலன் பெருங்குடிக் கோநகர்வள னெலா மிவர்தம்வரலாறு பலபடவிரித்துழி விரிவதியல்பாம். மற்றிவர் சேரர்பேரூர்ச்சென்றும்புகுந்திலர். வஞ்சியி லிவர் சரிதநிகழ்ச்சி யொன்றுமே கிடையாதன்றோ? மேலும், அடிகள் தம்மூர் தாம்வியக் கும் விருப்பினராகாரென்பது, புகார் மதுரைநகரநலங்களை வஞ்சியி னின்றும் பலபடவிரித் திவர்பெட்புறப்பேணிப் பாடியதிறத்தானு மினிதுவிளங்கும். இவ்வாறு வஞ்சிவளம்விரியாத சிலப்பதிகாரத்திலு மிதன் கடற்கரையணிமை 'யெஞ்சியசொல்லி னெய்தக்கூற'ப்பட்டுள்ள தற் கையமில்லை.

பத்தினிக்கடவுட்படிவமெழுதவோ ரிமையக்கால்கொளவமையா தெழுந்து, வஞ்சிசூடி, வடபுலமேகுஞ் செங்குட்டுவன் வழிச்செலவை, அடிகள்

> ......................."வஞ்சிநீங்கித்
> தண்டத்தலைவருந்தலைத்தார்ச்சேனையும்
> வெண்டலைப்புணரியின்விளிம்புசூழ்போத,
> மலைமுதுகுநெளிய,நிலைநாடதர்பட,
> உலகமன்னவன்ஒருங்குடன்சென்றுங்
> காலும்புரவியணித்தேர்த்தானையொடு
> நீலகிரியினெடும்புறத்திறுத்தாங்கு."

(i) சிலப்புகாதை வரி 3, 4.
சிலப்புகாதை 28 வரி 79—85.

என்றெழில்பட வருணித்துள்ளார். எனவே, தூசிப்படை (Van-guard) குடமலை மிதிக்கவும், பின்னணி கடற்கரை நடக்கவும், இடை நெடுநிலமெலாம் படைசெறிந்தொழுக, நீண்டு வஞ்சிநின்றெழுந்த வானவன்தானைப்பெருக்கம் இமயம்நோக்கி வடக்கேசென்று, நீடிய நீலகிரியடிவாரத்தேபாடியமைத்து முதலிற்றங்கியதென்பது தெளிவாகின்றது. இதனால் மேலைக்கடலிற்சங்கமிக்கும் பேராற்றி னழிமுகப் பெருந்துறையேவஞ்சிமூதூராகவேண்டுமென்பது மலையிலக்காமன்றோ? வஞ்சிநகர், நீலகிரிக்குத்தென்மேற்கே, கடற்கரைப்பேரூராயிருந்தாலன்றி, அதிலிருந்து வடக்கேபுறப்படுஞ்சேனை, கடல்தொட்டு, இடைநாடதர்படநடந்து, மலைமுதுகுநெளிய ஏறிக்கடப்பதெங்ஙனமாகும்? அன்றியும் ஆனிலைக்கருவூர் கடந்து வழிநடந்து வடக்கேகுஞ்சேனை நீலகிரியருகே தங்கக் காரணமுமில்லையன்றோ? ஐயங்காரவர்கள், அடிகளினிவ் வருமையுரையைத் தம்புத்தகத்தின் கீழ்க்குறிப்பொன்றி லெடுத்துக் காட்டி,"இது, காவிரியருகாங் கருவூரானிலையிலிருந்து வடக்கேசென்ற செங்குட்டுவன் வடயாத்திரையி லுடன்சென்ற அவன்சேனையின்பரப்பு மிகுதியை வருணித்தபடியேயன்றிப் பிறிதன்று. வஞ்சி கடற்கரைக் கண்ணதாயின், தானைகளின்பெருக்கைக்கூறவந்த அவ்விடத்தே, அவை கடற்கரைவிளிம்புவரை சென்றனவென்று அடிகள்கூறுவதிற் பெருமையும், வியப்புமில்லையென்க", என்றிதனைத் தந்துணிபுக்கியைவதாகப் பொருத்திக்காட்டமுயன்றுள்ளார்கள். பிற்காலப்புலவர்போல, அடிகள் அபூத கற்பனாலங்காரப்பிரியரன்றென்பதும், சங்கக்காப்பியமைந்தினுஞ் சிறந்த சிலப்பதிகாரம் இயற்கைநவிற்சிநலமேநயக்கு மியற்புலவர்பெருநூலென்பதும், சங்கநூலறிவார் சங்கையற்றறிவாரன்றோ? அடிகள், தானைப்பெருக்கைத் தானப்பெருக்கத்தளவாற் பெருக்கித் தருக்கு மிடைக்காலப்புராணப் புலமையறியாததோடு, இயற்கையொடு முரணு மியல்புமறியார்: மறந்துந்திறம்பா வுண்மையுரைச்செவ்வியுடையார். இமயமலைநோக்கிச்செல்லுஞ் செங்குட்டுவன்சேனை, வடக்கேசெல்லவேண்டும். கருவூரானிலை மேற்குமலைத்தொடருக்கும் கீழ்கடலுக்கு மிடைநிலப்பரப்பினடுவெண்ணூராய், காவிரிக்கருகேநிற்கும். இக்கருவூரினின்று வடக்கேபுறப்பட்ட தானையின்தலைத்தார்

(தூசிப்படை) வடக்கும், பின்னணி தெற்குமாக, கையிரண்டே(i) கிழமேலாகச் செல்லுவதியல்பாம். அப்போழ்து, அச்சேனையின் தலைகடையணிகள் மலைகடலனுகா. இவ்வாறு, கருவூரானிலைக்கடை வாயிலே கூழைப்படைக்கும் (rear guards), பிற வடதிசையே தூசிப் படைக்குமிடமாகவும், அடிகள்கூறியபடி தண்டத்தலைவராதல் தலைத் தார்ச்சேனையாதல் புணரியின்விளிம்புசூழ்போதலேனும், மலைமுதுகு நெளியச் செல்வதேனு மெப்படியமையும்? அடிகள் பக்கப்படைகளை (Wings)யேகுறித்து, படையின்புடையகலத்தைவிரித்து, அது மலை கடலளவாய்ப் படர்ந்துநின்றதெனச் சேனைப்பெருக்கை விளக்கின ரென்னில், ஈண்டுக்குறித்த கடலெது, மலையெதுவாகும்? கருவூருக்கு மேல்புறமே மலையாகலாற் கீழ்கடலையேகுறித்ததெனல்வேண்டும். சோ ணாட்டின் மேற்கெல்லையான கருவூரினின்றும் வடக்கெழுந்த சேனை, இவ்வாறு புறச்சோழர்புனனாட்டின் கிழக்கெல்லைக்கடல்சாரக்காரண முண்டோ இனி, இது இயல்புரையாகாமல், படைப்பரப்பைக்காட்ட வந்த கவிக்கற்பனையேயாமாகில், சேரனதுகுடகடலை மேற்கெல்லையாக் காமல், அணுகிய மலைத்தொடரோடமைந்ததென்னும்? மானதபூசை யிற் கொழியலரிசியேனோ? இம்முறையில், குணகுடகடலா வெல்லைகட் டிச் சேனைப்பெருக்கைக்காட்டி விதனினுங் கவிப்பெருமை யினிதாகு மன்றோ? இனி, ஈண்டடிகள் மேலைக்கடலுக்கும் மேற்குமலைத்தொட ருக்குமிடையே படைநின்றதனையே குறிப்பதாக்கொண்டாலோ வெனில், கருவூரானிலையருகாகாமை வெளிப்படையாகும். இன்னும் வடவரைநோக்கிச்செல்வார், கருவூரிலிருந்து வடக்கேபோவதன்றி, நேர்மேற்காவழிக்கொள்வானேன்? வஞ்சிநீங்கி வழிக்கொண்டசேனை இளைப்பாற முதலில்நின்றவிடமாக அடிகள்கூறும் நீலகிரி, இக்கருவூ ருக்கு நேர்மேற்காகும். கருவூரிலிருந்து வடதிசையேகுஞ் செங்குட்டு வன், மயங்கி, வழியிழந்து, மேற்கேகி, நீலகிரியடிவாரத்தேவந்துதங்கின னாகவேண்டும். அல்லாக்கால் அடிகளினிவ்வருமையடிகள் பொரு ளிழந்த புரையுரையேயாகவேண்டும். இவ்வாறு அரசனும், தண்டத் தலைவரும், சேனையும், மயங்கி, வழியிழந்து தயங்கினதாக்கொண்டு, முறைபிறந்திடர்ப்பட்டேனும் குடகடல் வஞ்சியை யிடம்பெயர்த் தெடுத் தகநகராக்குமாற்றலை வியத்தலினும், உண்மைக்கும் புலவர்

(i) கையிரண்டு=பக்கப்படை (Wings).

131-ம்பக்கம் கீழ்க்குறிப்பு.

பிறர்கொள்கைக்கு முரணாத அடிகள்வாக்கின் செம்பொருளைக்கொண்டு அதுசுட்டும் நேர்வழியும் அவ்வழிகாட்டுமூரும் கடைப்பிடிப்பதழகா மன்றோ ?

ஈண்டடிகள்கூறியாங்கே, பெரியபுராணத்திலும்,ஆரூரிற் சுந்தராராம் "தன் னேரில்லாவன் றொண்டர்தமையுங் காண்பேனெனவிரும்பி, நன் னீர்நாட்டுச்செலநயந்த சேரர்கோமானார், நன்னாட்கொண்டு, பெரும் பயணமெழுகவென் று நலஞ்சாற்ற," அம்'மலைநாட்டுள்ளார், அயில்வேற் குலமறவர், அடைய(1) வஞ்சியகநகர்வாயணைந்து, கடற்றரங்கமடுத்து' நின்று,'மேன்மேல்விரவிப்பரந்'திடை நிலம்தரச்சென்று,'நெடுஞ்சேனை, நேமி(குடமலை)நாட்டெல்லைகடந்து,' "மறவர்பயில்கொங்கநாடுகடந்து, பொன்னிநீர்(சோழ)நாட்டிடைப்போவார்" என்று,—சேக்கிழாருமிவ் வழியை யிம்முறையேகூறியுள்ளதுஞ் சிறிது சிந்திக்கத்தக்கதாம். இத னால் மலைநாட்டுத்தலைநகராம் வஞ்சிநின்றெழுந்துவழிக்கொண்டோர், இவ்வாறு கடல்விட்டு, இடைநிலங்கடந்து, மலையேறிச்சென்று, குட மலைத்தொடரின்குணபுறத்தடிவாரத்திறங்கியபின்னரே சமநிலப்பரப்பி னொரு நெடுவழிகூடுவது முறையென்பது தெளிவாகின்றது. இன்னு மிவ்வாறே, சேரர்பேரூரிலிருந்து வடதிசையேகும் பெரும்பாதை, முன்னாளில் அடிகள் கூறியபடியே, வஞ்சிநின்று முதலிற் செங்குணக் காகச்சென்று, அந்நாட்டுக்கீழெல்லை மலைகடந்தபிறகு வடக்கேதிரும்பி, நீலகிரியோரமாகப்போயிற்றென்பது,—கிட்கிந்தைவிட்டுச் சீதையைத் தேடித் தெற்கேசென்ற வானரவொற்றர் வழிகூறுமிராமாயணக்குறிப் பாலும் வலியுறுகின்றதாகும். இவைபலவாறு மேற்குறித்த சிலப்பதி காரவரிகளால் அடிகள் வஞ்சிமேலைக்கடலோரம் போராற்றின்மேலூரா மென்பதை விசதப்படுத்திய செவ்விதெளிவாகின்றது.

இதுமட்டேயோ ? வஞ்சிகடலடுத்தவூரென்பதற்குத் தொன் னூற்குறிப்புக்கள் இன்னுமுள. வடவாரியரையடக்கிக்கண்ணகிக்குப் படிமக்கல்லுங்கொண்டு, செங்குட்டுவன் திரும்பித்தன்னூர்புகுந்த பின், வேள்விச்சாந்தியின் விழாக்கொளவேவி, "அருளான் ஒருநாள் ஆரியஅரசரை அருஞ்சிறைநீக்கி," அவ்வரசரைப் பிறமன்னர் தங்கு வதற்கென்றே ஊர்ப்புறத்தமைக்கப்பெற்ற மாளிகையிலிருக்கச்செய்து

(1) அடையகதிரண்டு.

அவரையுபசரிக்கத் தன் படைத்தலைவனான வில்லவன்கோதையையும்,-தான்மகிழ மவ்வேள்விப்பெருவிழாக்காலத்திற் றன்கருணைக்குறியாகத் தன்னூர்ச்சிறைதிறந்து குறையாளரைவிடுத்துத் தனக்குரியகுடிகளின் கடமை(அரசிறை)களைநீக்கு(வஜாசெய்யு)மாறு அமைச்சன் அழும்பில் வேளொடு கணக்கரையும்,—ஏவினனென் றுகூறுமிடத்திலும், அடிகள் தருங்குறிப்புகள் மறக்கற்பாற்றன்று. அவை வருமாறு:—

"வேள்விச்சாந்தியின் விழாக்கொளவேவி
யாரியவரசரையருஞ்சிறைநீக்கிப்
பேரிசைவஞ்சிமூதூர்ப்புறத்துத்
தாழ்நீர்வேலித்தண்மலர்ப்பூம்பொழில்
வேளாவிக்கோமாளிகைகாட்டி,
... ... ... ...
... ... ... 'அம்
மன்னவர்க்கேற்பனசெய்கநீ',யென
வில்லவன்கோதையைவிருப்புடனேவிச் ;
'சிறையோர்கோட்டஞ்சீமின்யாங்கணுங்
கறைகெழுநல்லூர்க்கறைவீடுசெய்ம்'மென
வழும்பில்வேளோடாயக்கணக்கரை
முழங்குநீர்வேலிமூதூரேவி... ... னன்,
... ... ... ...
வடதிசைவணக்கியமன்னவரேறென." (i)

ஈண்டு, நகர்ப்புறத்துப் பிறமன்னர்தங்கவமைந்த மாளிகையை—"தாழ்நீர்வேலித் தண்மலர்ப் பூம்பொழில் வேளாவிக்கோமாளிகை" யென்றதை, "இன்னிசைப்புணரி யிரங்கும்பௌவத்து, நன்கல வெறுக்கை துஞ்சும் பந்தர்க், கமழுந்தாழை கானலம்பெருந்துறைத் தண்கடற்படப்பை நன்னாட்டுப்பொருந"(ii)என்னுங் காக்கை பாடினியார் நச்செள்ளையார் வாக்கொடுமொத்துநோக்க, வஞ்சி கடற்கரையூர் என்ப தினிதுவிளங்குவதாகும். வஞ்சிமூதூர், அகநகரும் புறத் துறைப்பட்டினமு மாகப்பிரிந்துநின்றதை முன்னமே குறித்துளேம். இவ்வேளாவிக்கோமாளிகை வஞ்சிமூதூர்ப் புறத்தமைந்ததெனவே, இதனைப்பட்டினப்பாக்கத்திற் கடற்கரையோர மமைந்துளதாக் கொள்வதியல்பாகும். சேரநாட்டு மேலைக்கடற்கரையோ, நெய்தற்

(i) சிலப்பு 28 வரிகள் 194 to 198. 234 வரி வரை.
(ii) பதிற்றுப்பத்து செய்யுள் 55.

பிறநிலம்போலன்றி, இன்றுவரை தெங்கொடுபலவும் தீங்கனிபலவும் தங்கிய வயலும் நின்றுசெழிக்கும் படப்பை...... (iii) வளநிலமாவ தறிவோம். ஆகவே வஞ்சிப்புறத்துறையில், 'ஆழ்ந்தகடனீரே வேலியாக்கொண்டு, வளமலிசோலைநடுவேநிற்கும் வேளாவிக்கோ மாளிகை' என் றடிகள்குறித்ததன்றி, இவ்விடத்து ஐயங்காரவர்கள் சொல்லுமாறு, (a) 'தாழ்நீரை'ப் பொய்கை என்று வலிந்து பொருள் கொண் டெடப்படியு மிவ்வூர்க்கடற்கரைச்சம்பந்தத்தை மறைப்போ மென்று முயலுதல் ஈண்டு எவ்வளவு பொருந்துமென்று நடுவுநிலை வாதிகளே தீர்மானிப்பார்களாக. அன்றியும் மாந்தரால் இயற்றப் பெறுப்பெருநீர்நிலையே பொய்கையெனப்படும். கடலணுகாவுண்ணாட் டுக்கருவூரானிலையே வஞ்சியாமாகில், கடலைமறைக்க ஐயங்காரவர்கள் கொண்ட வேளாவிக்கோமாளிகைசூழ்ந்துநின்ற பொய்கைதான் யாண்டுளது? இனி யிவ்விடர்கடக்க, இடைக்காலத் திப்பொய்கையு மழிந்து நிலமாயிற்றென லின்றியமையாததாகும். ஆனல் சரிதபரம் பரையிலிவ்வாறு கருவூருகே பெருநீர்நிலையொன்று நின்றுமறைந் ததான கதையுமே காணேம். இதுவுமன்றி, அடிகள் யாண்டும் தன் னூலில் ஏரி அல்லது ஆறு கூறுமிடத் ததனை யாழ்ந்த நீரென்றழைக் கக்காணுமையோடு, 'கடல்குறிக்குந்தொறும், ஆழ்ந்தநீரெனும் பொருள்தருமடையே பெய்தமைக்கும் வழக்குடையராகவும் தெரி கின்றது. இதனை மூவேறிடங்களில் அடிகள் கடல்கூறும் வாக்கின் போக்காலுதகரிப்பேம்.

(i) "சந்தின்குப்பையுந்தாழ்நீர்முத்துந்
தென்னரிட்டதிறைவொடுகொணர்ந்து"

(ii) "வெண்டிரைபொருதவேலைவாலுகத்துக்
குண்டுநீரடைகரைக்குவையிரும்புன்னை
வலம்புரியீன் றநலம்புரிமுத்தம்"

(iii) "பேரிசைவஞ்சிமூதூர்ப்புறத்துத்
தாழ்நீர்வேலித்தண்மலர்ப்பூம்பொழில்
வேளாவிக்கோமாளிகை... ... ... ..."

---

(iii) படப்பை=கொழுவிய தோட்டக்கால்நிலம்.
(a) பக்கம் 81 ...... 119.
சிலப்பு கால்கோட்காதை 26 வரி 168—169.
நீர்ப்படைக்காதை 27 வரி 242—245.
நடுகற்காதை 28 வரி 196—198.

இவைதம்மில், முதலிரண்டுகாதைகளிலும் முறையே 'தாழ்நீர்', 'குண்டுநீர்', என்பவை கடலையே விசேடித்திருக்க,—இந்நடுகற்காதையில் மட்டும் 'தாழ்நீர்வேலி' என்பது கடல்குறியாதெனல் உரைமரபாமா?

இஃதெவ்வாறாயினும், இவ்விடத்திற் சிறிதுகீழே, 'கறைகெழு நல்லூர்க்கறைவீடு (b) செய்ம்மென, அழும்பில்வேளோடாயக்கணக்கரை முழங்குநீர்வேலிமூதூரேவி' எனக்குறித்த மூதூர் யாதாம்? அரசன் அத்தாணிமண்டபத்தே கொலுவிருப்பான் தன் குடிகளின் வரிச்சுமையை நீக்குமின் என்று தன்னமைச்சனையுங் கணக்கரையும் பணித்து அதுமுடிப்பானவரையங்கிருந்து ஊருக்குள்ளனுப்பினனாதலான், அவ்வூர் வஞ்சிமூதூரேயாகல்வேண்டுமென்பதொருதலையன்றோ? ஈண்டு, இம்மூதூர், முழங்குநீர்வேலியுடைத்தென வடிகள் கூறவுமிதனையுணராட்டீரெனக்கொண்டுமமையாதே, சிலப்பதிகாரத்திலிவ்வூரின் கடற்கரைச் சம்பந்தமே கூறப்படவில்லை' யெனவுந் துணிந்துகூறவருவார்கள்மனவலி சிறிதன்றாகும். இஃதுணர்ந்து வைத்தும், செங்குட்டுவன்சரிதநூலார், இம்'முழங்குநீர்வேலி மூதூர்' என்பதற்கு, 'நீர்வளமிக்கநகரங்களில்' என்றுமட்டே பொருள்கூறிச்செல்வார். அடிகள் ஈண்டு கடல்குறியாது நீர்வளமொன்றே கருதினராயின், அக்குறிப்பைச் செவ்வையாய்ப் புலப்படுத்த மறந்ததுமன்றி, அதற்கு மாறாக, 'முழங்குநீர்வேலி' என்று பயனில்பலசொற்பெய்துவைப்பானேன்? ஆம்பிராவதிநதியையுமணுகாதுநிற்குங் கருவூரானிலை; முழங்குநீர்வேலி மூதூராமோ? ஆகாதென்றறிந்து, இவ்வாறு நீர்வளமிக்க வூர்ப்பொதுவாகப் பொருள்காணல் ஈண்டு அடிகள் வாக்கின்போக்கோடமைவதாமா? அரசன் குடிகளின் வரிகளை நீக்கப்பணித்தகாலை, நீர்வளமிக்க நகரங்களைமட்டுஞ்சுட்டிப் பிறவூர்களை மறப்பதேனோ? இதற்காகவே, குட்டுவன்சரிதநூலார் 'நீர்வளமிக்கநகரங்களிலும் மற்றையூர்களிலும்', என்று கூட்டியுரைத்துவைத்தார்போலும். ஊரூராக வமைச்சனையுங் கணக்கரையு மேவினதாகக்கொள்ளப் பாட்டிடந்தரவில்

(b) கறைவீடு=அரசிறை யல்லது வரிகளைவிடுதலை (வஜா) செய்தல்.

பக்கம் 126.

பக்கம் 83.

லையே? வடயாத்திரைக்குப் பறைசாற்றுவித்தது வஞ்சிமட்டிலா மாகில், வரிவஜாவுத்தரவை யூரூராச்சென்று சொல்ல அமைச்சனை யனுப்புவ தின்றியமையாததெப்படியோ? "கறைகெழுநல்லூர்க் கறைவிடுசெய்ம்மென... ... ...முழங்குநீர்வேலிமூதூரேவி" என் பதே மூலம். இதற்கு, சுங்கமுதலிய வரியிருந்தவூரில், வரிநீக்கப் பணித்த தன்னாணையைமேற்கொண்டு, அதை நிறைவேற்றுமாறு, அவசியமான கணக்கெடுத்தும், கீழ்த்தொழிலாளரை வேண்டியாங் கனுப்பியும் வேண்டுமேற்பாடுசெய்யுமாறு, அரசன் தன்னமைச் சனையு மாயக்கணக்கரையுந் தன் கொலுமண்டபமிருந்து மூதூருக் குள்ளேவினன், என்றமட்டே நேர் பொருளாகுமன்றோ? அன்றியு மடிகள், தன்னூரில், மணிமேகலையிற்போலவே புகார்,மதுரை, வஞ்சி யெனு முடிவேந்தர்மூவர்பேரூர்களையே மூதூரென்றழைப்பதன்றி, ஒரு நாட்டில் வரி வஜாப்பண்ணநினைக்கும் பட்டிமுதற் பட்டின மீறுப் பலதரவூர்களையும் பொதுப்பட மூதூரென்றழைக்கும் வழக் கறியேம். மேலும், ஒரு ஊரின் நீர்வளத்தைமட்டுங் குறிக்குங்கால், "முழங்குநீர்வேலிமூதூர்" என்று சிலப்பதிகாரத்தேனு மடிப்பட்ட பழநூல்களிலேனும் வேறுபிரயோகமுண்டா? 'முழங்குநீர்' என்னு மடை கடலையேகுறிப்பது வெள்ளிடைமலையன்றோ? தங்கொள் கைக்கு முரணுமிடத்தெல்லாம் வலிந்து புத்துரைகொள்ளமுயல்வது பிடிவாதிகளின்வழக்கமெனினும், ஆன்றதமிழ்ப்புலமைவாய்ந்த ஐயங்காரவர்களிவ்வாறு கூறலாமா?

இவ்வஞ்சி கடற்கரையிற் பொருநைக்கழிமுகத்தூரென்பதைப் பிறிதோரிடத்தில் அடிகளிதனினுந்தெளிவாக விளக்கியுள்ளார். வடதிசைச்சென்று, "தண்டமிழிகழ்ந்தவாரியவரசாமர்க்களத்தழிய" வென்று, பத்தினிப்படிமத்திற்கிமயக்கற்கொண்டு, கங்கையில் நீர்ப் படைசெய்து, வெற்றிமுரசுடன் மீளத்தன்வஞ்சிநகருக்குவந்த செங்குட்டுவன் நல்வரவையும், அப்போதவன் கோநகர்க்குடிகள் பலருமவனை வாழ்த்தியெதிர்கொண்ட சிறப்பையும், பின்வருமாறு வருணிக்கின்றார்.

"குடதிசையாளுங்கொற்றவேந்தன்,
வடதிசைத்தும்பைவாகையொடுமுடித்துத்
தென்றிசைப்பெயர்ந்தவென்றித்தானையொடு
நீடுதுஞ்சுவியனகர் நீடுநிலைநிவந்து
..................................
பாட்டொடுதொடுத்துப்பல்யாண்டுவாழ்த்த,
..................................
தண்ணம்பொருநைபாடுநெரிட்ட
வண்ணமுஞ்சுண்ணமுமலரும்பரந்து
விண்ணுறைவிற்போல்விளங்கியபெருந்துறை
..................................
துருகலர்தாழைக்கோட்டுமிசையிருந்து,
'வில்லவன்வந்தான்வியன்பேரிமயத்துப்
பல்லானிரையொடுபடர்குவிர்நீர்'எனக்
காவலனிரைநீர்த்துறைபடீஇக்
கோவலரூதுங்குழலின்பாணியும்,—
வெண்டிரைபொருதவேலைவாலுகத்துக்
குண்டுநீரடைகரைக்குவையிரும்புன்னை(யில்),
வலம்புரியீன்றநலம்புரிமுத்தம்
கழங்காடுமகளிரோதையாயத்து
வழங்குதொடிமுன்கைமலரவேந்தி
'வானவன்வந்தான்—வளரிளமுலை
தோணலமுணீஇயதும்பைபோந்தையொடு
வஞ்சிபாடுதுமடவீர்யாம்'எனு
மஞ்சொற்கிளவியரந்தீம்பாணியும்,—
ஓர்த்துடனிருந்தகோப்பெருந்தேவி
வால்வளைசெறிய,வலம்புரிவலனெழ,
மாலைவெண்குடைக்கீழ்வாகைச்செவ்வியன்
வேகயானையின்மீமிசைப்பொலிந்து
குஞ்சரவொழுகையிற்கோநகரேதிர்கொள
வஞ்சியுட்புகுந்தனன்செங்குட்டுவனென.

சிலப்பதிகாரம் 27, வரி 197, 198, 199, 200, 213, 231, 232, 233, 237, to 255.

ஈண்டுக் கோடிட்டவரிகளைச் சிறிது ஆழச்சிந்திப்பார், வஞ்சி, பட்டினமென்பதற்குப் பிறசான்றெதுவுந்தேடார். கோநகரானிரையைப் பொருநைநீர்த்துறைப்படுத்திநிற்குங்கோவலர், தங் காவலன் வரவுகேட்டு மகிழ்வார், அவன் வடநாட்டுவிஜயத்திற் கவர்ந்துடன்கொடுவரும் பசுத்திரள் தங்கள்செல்வத்தைப்பெருக்குமெனத் தருக்கி மிகக்களித்து, பொருநையாற்றின் *கழிமுகத்தே கடற்கரைத் தாழைக்கோட்டுமிசை யேறியிருந்தூதுங்குழலிசையும் நடுவூர்க் கொடிமதிலலைக்கும் ஆற்றுமணலைவெறுத்தலைவாய்க்கரைக் கடல் மணலிற், புன்னையடிநிழலில், அக்கடல்கொழித்தமுத்தே கழங்காக வைத்து விளையாடும் பெண்டிர்கூட்டத்தே வானவன்வருஞ்செய்தி கேட்டோர் அவனை வாழ்த்திப்பாடுமிசையும் ஓர்த்துடனிருந்தகோப் பெருந்தேவி வால்வளைசெறிய, வலம்புரிச்சங்கார்ப்ப, யானைமிசைப் பொலிந்து, செங்குட்டுவன் வஞ்சியுட்புகுந்தனன்; என்பதே மேற் குறித்த சிலப்பதிகாரச் சீரிய அடிகளின் நேரிய பொருளாகும்.

இதில், கோநகர்க்கோவலர் தாழைக்கோட்டுமிசையிருந்தூதினரெனவும், வேலைவாலுகத்துக் குண்டுநீரடைகரைகுவையிரும்புன்னையடியில் வலம்புரியீன்ற நலம்புரிமுத்தைக்கழங்காடு மகளிரெனவும், அடிகள் நெய்தற்கருப்பொருள்கள்சுட்டி, அதனாற் கடற்கரையணிமை விளங்கவைத்ததுவுமன்றி,—நீராடுவோரிடு சுண்ணமுமலரும்பரந்துவிளங்கிய பொருநைநதிசங்கமிக்கும் பெருந்துறையென்றும், "வேலை† வாலுக‡த்துக் குண்டுநீரடைகரைக்குவையிரும் புன்னை(யடியிற்) கழங்காடு மகளிரோதைையாயத்தந்தீம்பாணி" அந்தப் புறத்திருந்த கோப்பெருந்தேவியைக்களிமகிழ்வூட்டியதென்றுகூறி,- அதனாலிவ்வாறு செங்குட்டுவனை வரவேற்றவஞ்சி—இப்பொருநையாற்றின் கழிமுகத்தே, "கடலங்கரைமேற்"கோநகரேயாமென்பதையுமையமறவிசதப்படுத்தி யிருக்கின்றனர்: பின் நடுகற்காதையிலிவ்வூரைத் 'தாழ்நீர்வேலி' 'மூதூ'ரெனச் சுட்டுவதேபோ லீண்டுமிதைக் §"குண்டுநீரடைகரை" என்றிதன்கடற்சம்பந்தத்தை விதந்துகூறி

* கழிமுகம்=ஆறு கடலொடு கலக்குமிடம்.

† வேலை=கடல். ‡ வாலுகம்=வெண்மணல்.

§ குண்டுநீர்=ஆழமான நீர், அதாவது கடலாம்.

யுள்ளார். இனி யெடுத்தகொள்கைக்கேற்றபடி பழையபாட்டுக்களுக்குப் பொருள்காணவல்லார்சில ரிவ்வரிகளுக்கு, இவ்வாறு செம்பாகமாகப்பொருள்கொள்ளாது, கடற்கரைமணலிற் புன்னைமரத்தடியில் வலம்புரியீன்றமுத்தை, உண்ணாட்டோன கருவூராணிலைமகளிர் கொண்டு கழங்காடுவார் செங்குட்டுவனை வாழ்த்தியேத்தினர், என்று கூறக்கூடும்: அது பொருளன்மைதெளித லெளிது. எதிரேற்றுப் பாடும் வஞ்சிமார் வஞ்சியூருடையார் என்பதும், அவர் பாடியதும், பாடுமுன் கழங்காடியது மவ்வூர்ப்பாக்கத்தென்பது மிவ்வரிகளில் மறுக்கொணா வெளிப்படை. திருவானிலையருகாம்பிராவதியே பொருநையாமாகில், அவ்வூர் மடவார் அவ்வாற்றிற்பிறக்கு மணிமுத்தைக் கழங்காடினரெனப்பாடாமல், கடன்மணலிற்பிறந்த முத்தெனக்கூறக் காரணம்வேண்டும். சேரருக்குத் தங்கோநகரனுகா முத்துப்பிறக்குங்கடலுரிமை யீண்டுவிதந் திப்பெண்டிர்வாயிலாக்கூறிவைக்க அடிகள்கண்ட சிறப்புடைமையாதோ? அன்றியும், முத்தீனுஞ் சங்கு புன்னைமரத்தடிதேடி ஈனுவதற்கவசியமு மதிற்பெருஞ் சிறப்புமென்னோ? இதுவுமன்றி, இக்கவியில், பெண்டிர் தத்தமனைகளிற் றனியேகழங்காடி நின்றார்.—செங்குட்டுவனைப் பாடினதாகக் காணவுமில்லை. 'கழங்காடுமகளிரோதையாயத்து'ப்பாடும் பாணியென்றதனால், அவர் பலரும் காவலன் நல்வரவுகேட்டுப் பாடுமுன் அவர் கூடி விளையாடி நின்றதோரிடமுண்மை குறிக்கப்படுகின்றது. அவ்வாறும் மகளிராயத்தார் குழுமிவிளையாடியவிடத்தை யீண்டடிகள்வருணித்தாரென்பதல்லால், கெடவரலில்* மடவரலார்† கழங்காகக் கொண்டு விளையாடிய முத்தை, அது பிறந்தவிடத்தழகை விரிப்பதனால் வருணித்தாரென்ப தடிகளின் செவ்வியகவிப்போக்குக்கெட்டுணையும் பொருந்தாவொன்றாம். மேலும், முத்துப்பிறக்குமிடம் பலவற்றுட் கடலொன்றேயாகவும், புனனாட்டுக் காவிரிப்படப்பைக் கருவூர் மகளிர்விளையாட்டைப் புகழவருவார், திடீரென முன்பின் யாதொருசம்பந்தமின்றி வறிதேகிடந்தகடலைவலியவிழுத்து வருணிப்பாரோ? ஆகவே, கோதையை‡ வரவேற்றமாதரார், கோநகர்ப்புறத்தே, பெருங்கடலடைகரை யொருங்கிருந்தாடியபெற்றியே யிவ்வடிகள்

---

* கெடவரல்=பெண்டிர்விளையாட்டு. மடவரலார்=பெண்கள்.

‡ கோதை=சேரன்; ஈண்டுச் செங்குட்டுவன்.

சுட்டியதாகவேண்டுமென்பது தெளியக்கிடப்பதன்றோ? தெளியவே, அக்கோநகர்ப்பெண்டிர் கூடிவிளையாடுதற்கான வெண்மணலடைகரைத்துறையே வஞ்சி முன்றுறைப்பட்டினமென்பதும் வெள்ளிடைமலையேயன்றோ? ஈண்டிவ் வஞ்சிப்பட்டினம் பொருநைக்கழிமுகப்பெருந்துறையென் றடிகளினிதுவிளக்கியதால், சேரர்கோநகர்ப் "புறமதிலலைக்குமாந்பொருநை" யீண்டடிகள் சுட்டிய அலிமுகப் பேராறேயன்றிக் கடல்தொடாக்காவிரிச் சிறுதுணையாம்பிராவதியாகாதென்பது மலையிலக்காம். இவ்வாறு, கடற்கரைவஞ்சி காவிரியருகாணிலையாகாதென விளக்கு மிவ்வடிகள்வாக்கொன்றே, பேராறுநிலமிழியுமிடத்தேநிற்கும் அலைதழுவாமலைமடிமேற்றிருக்கரூரே வஞ்சியென்னும் ஸ்ரீ கனகசபைப்பிள்ளையவர்கள் கருத்தையு மறுத்துநிற்கும்.

இன்னும், சேரர்சிறப்பேகூறும் பதிற்றுப்பத்தில், நெடுமலைநாட்டின் குடகடனலமும், அக்கடலின் அடைகரைப்படப்பைச்செழுநிலச்செவ்வியும், அந்நிலத்தில் வஞ்சிப்பட்டினவளமும், விரிக்கும் பாக்களும் பலவாம். அவையிற்றிற் சிலவற்றைமட்டு மீண்டுக் காட்டுவாம் :—

(i) "இணர்ததைஞாழற்கரைகெழுபெருந்துறை
மணிக்கலத்தன்னமாயிதழ்நெய்தற்
பாசடைப்பனிக்கழிதுழைஇப்புன்னை
வாலிணர்ப்படுசினைக்குருகிறைகொள்ளு
மல்குறுகானலோங்குமணலடைகரை
தாழடும்புமலைந்தபுணரிவளைஞால
விலங்குநீர்முத்தமொடுவார்துகிரெடுக்குந்
தண்கடற்படப்பைமென்பாலனவும்."

(ii) "உறுகாலெடுத்தவோங்குவரற்புணரி
நுண்மணலடைகரையுடைதருந்
தண்கடற்படப்பைநாடுகிழவோயே."

(iii) "கடலொலிகொண்டுசெழுநகர்நவெ"

(iv) "கடலவுங்கல்லவும்யாற்றவும்பிறவும்
வளம்பலநிகழ்தருநனந்தலைநன்னாட்டு
விழவறுபறியாமுழவிமிழ்மூதூர்"

---

(i) பதிற்றுப்பத்து செய்யுள் 30 வரிகள் 1—8.
(ii) பதிற்றுப்பத்து செய்யுள் 88 வரிகள் 40—42.
(iii) பதிற்றுப்பத்து செய்யுள் 21 வரி 12.
(iv) பதிற்றுப்பத்து செய்யுள் 15 வரி 16—18.

(v) "துளங்குநீர்வியலகங்கலங்கக்கால்பொர
விளங்கிரும்புணரியுருமெனமுழங்குங்
கடல்சேர்கானற்குடபுலமுன்னிக்
கூவற்றுழந்ததடந்தாணாரை
குவியிணர்ஞாழன் மாச்சினைச்சேக்கும்
வண்டிறைகொண்டதண்கடற்பரப்பி
னடும்பமலடைகரையலவனாடிய
வடுவடுநுண்ணயிரூதையுஞற்றுந்
தூவிரும்போந்தைப்பொழிலணிப்பொலிதந்து."

(vi) "இன்னிசைப்புணரியிரங்கும்பௌவத்து
நன்கலவெறுக்கைதுஞ்சும்பந்தர்க்
கமழுந்தாழைக்கானலம்பெருந்துறைத்
தண்கடற்படப்பைநன்னாட்டுப்பொருந,"

ஈண்டிறுதியிற்காட்டிய நச்செள்ளையார் அடிகளையும், பின்வருமடிகளின் சிலப்பதிகாரவடிகளையு மொத்துநோக்க,—

"கடல்சேர்கானற்குடபுலத்தே,"வஞ்சியாம்
"முழங்குநீர்வேலிமூதூரில்," "இரங்கும்
பௌவத்துநன்கலவெறுக்கைதுஞ்சு"மழகின்

செவ்வியினிதுவிளங்கும்.

"குடதிசையாளுங்கொற்றவேந்தன்
நிதிதுஞ்சுவியனகர்"

"அளந்துகடையறியாவருங்கலஞ்சுமந்து
வளந்தலைமயங்கியவஞ்சிமுற்றத்து."

என்பனவிவ்வஞ்சிப்பட்டின வளங்குறிக்கு மிளங்கோவடிகள் வாக்காம்.

இனி, வஞ்சிமாநகரம் கடற்கரைக்கண்ணதாயின் ......"மணிமேகலை முதலிய முன்னூல்கள், உடனெத்த புகார் கொற்கை முதலிய பட்டினங்களைப்போலவே வஞ்சியையுமதன் கடல்வளச்சிறப்பால் வருணித்துக்கூறுமற்போகுமா? ஒருகாலுமில்லை" என்ற செங்

(v) பதிற்றுப்பத்து செய்யுள் 51 வரிகள் 1—9.
(vi) பதிற்றுப்பத்து செய்யுள் 55 வரிகள் 3—6.
சிலப்பு காதை 27 வரி 197—200.
சிலப்பு காட்சிக்காதை வரி 33—34.
சேரன்-செங்குட்டுவன் பக்கம் 126.

குட்டுவனூ லுடையாருக்கு, வஞ்சிவருணனையடங்கிய மணிமேகலை 28-வதுகாதைவரிகளைச் சிறிதுநினைவுறுத்த விடையேற்பாம். உண்ணாட்டோராய 'மதுரை' நலங்கூறு மூர்காண்காதைபோலல்லாது, செய்தனலம்பேணி, அந்நிலக் கருப்பொருள்பலவுஞ்சுட்டிக் காவிரிப் பூம்பட்டின வளம்பலவிரித்த நாடகக்காப்பியத்தின் இந்திரவிழவூ ரெடுத்தகாதை வரிகளையும், வஞ்சிவளங்கூறுஞ் சாத்தனார் நூலிற் கச்சிமாநகர்புக்ககாதை வரிகளையு முடனொத்துநோக்குவார்க்கு,— வஞ்சியும்புகாரேபோற் பட்டினமாமென்பது வெள்ளிடைமலையேயாம். மணிமேகலைநூலை வெளிப்படுத்தியுபகரித்த மகாமகோபாத்தியாய ரவர்கள், இப்புத்தகமுதற்பதிப்பில், உஎஉ-ம்பக்கத்தில் இக்காதையின் உகூ-ம் பக்கத்தில் முதல் சுஅ வரையுள்ள வரிகளுக்கும்,சிலப்பதிகார இந்திரவி[illegible]வூர்க்காதை எ-முதல் ருஅ-வரையுள்ள வரிகளுக்குமுள்ள ஒற்றுமை[illegible]த்தை விதந்தெடுத்துச்சீர்தூக்கிப் பாராட்டியுமுள்ளார்கள்.

*"பன்மீன்விலைஞர்வெள்ளுப்புப்பகருநர்
கண்ணொடையாட்டியர்காழியர்கூவியர்
பைந்நிணவிலைஞர்பாசவர்வாசவர்
செம்புசெய்குநருங்கஞ்சகாரரும்
பைம்பொன்செய்ஞரும்பொன்செய்கொல்லரும்
மரங்கொறச்சரும்
தோலின்றுன்னருந்துன்னவினைஞரும்
பால்வேறுகவெண்வகைப்பட்ட
கூலங்குவைஇயகூலமறுகும்
இலங்குமணிவினைஞர்இரீஇயமறுகும்
விலங்காம்பொருஉம்வெள்வளைபோழ்நர்."

†"மீன்விலைப்பரதவர்வெள்ளுப்புப்பகருநர்
காழியர்கூவியர்கண்ணொடையாட்டியர்
பாசவர்வாசவர்பன்னிணவிலைஞர்
கஞ்சகாரருஞ்செம்புசெய்குநரும்
பொன்செய்கொல்லருநன்கலந்தருநரும்

மணிமேகலை காதை 28 வரிகள் 29—68.
சிலப்பு காதை வரி 7—58.
* மணிமேகலை வஞ்சிவருணனை 28-கச்சிமாநகர் புக்க காதை.
† சிலப்பதிகாரம் புகார் வருணனை இந்திரவிழவூரெடுத்தகாதை.

மாங்கொறச்சரும்
துன்னகாரருந்தோலின்றுன்னரும்
பால்வகைதெரிந்தபகுதிப்பண்டமொடு
கூலங்குவித்தகூலவீதியும்
திருமணிகுயிற்றுநர்சிறந்தகொள்கையோடு
அணிவளைபோழுநரகன்பெருவீதியும்."

நெய்தற்கருப்பொருள்கூட்டிய நாற்கவிராஜநம்பி அகப்பொருள் விளக்கம் 24-ம் செய்யுளையும், தொல்காப்பியம் பொருளதிகாரம், அகத்திணையியல், 18-ம் சூத்திரத்தின்கீழ் நச்சினார்க்கினியர் குறிப்பும் ஒப்புநோக்கின், மேற்கண்ட வஞ்சிவருணனை அவ்வூரைப் பட்டினமாக்கிநிற்ப தினிதுவிளங்கும்.

அலைதாலாட்ட மலைமடிவளரும் வானவர்நாட்டில், கடலுங்கானமும் பலபயமுதவ",(i) மலைபவுங்கடலவும் பண்ணியம்(ii) மலிந்தவை வஞ்சியினிறைந்த வளஞ்சொலும்புலவர் - மணிபல்லவத்திருந்து விசும்பாறாகவந்திறங்கிய மணிமேகலை, "......வானவன் வஞ்சியின் .........பன்மீன்விலைஞர், வெள்ளுப்புப்பகருநர்,........விலங்கரம் பொருஉம்வெள்வளைபோழ்நரோ டிலங்குமணிவினைஞரிரீஇயமறுகும், புதுக்கோள்யானையும், பொற்றார்ப்புரவியும், கதிக்குறவடிப்போர் கவின்பெறுவீதியும், சேணோங்கருவிதாழ்ந்தசெய்குன்றமும், வேணவாமிகுக்கும் விரைமரக்காவும், விண்ணவர்தங்கள் விசும்பிடமறந்து நண்ணுதற்கொத்த நன்னீரிடங்களும்..... கண்டுமகிழ்வுற்ற" தாகக் கூறியுள்ளார். இவ்வருணனை வஞ்சி கடற்கரையூரென்[illegible]த் தெளிவாக்கவில்லையெனில், இவ்வரிகள் பயனில் கூற்றாகவேண்டும். சிலப்பதிகாரத்தில், மதுரைவளம்விரித்துளபகுதியி லிவ்வாறு எனைத்தும் கூறப்படாததோடு, பட்டினமாய பூம்புகார்ப்பகுதியி லிஃதேபோற் கருப்பொருணலமெடுத்தாளப்பட்டுமுளதென்று மேலேகூறினும். அடிகளோ மற்றிருமுடிவேந்தர் மூதூர்களைப்போல வஞ்சியூர்நலம் வருணித்திலர்: வருணிக்கக் காரணமுமில்லையென்பது மேலேகாட்டியுள்ளோம். ஆகவே அடிகள்கூறிய புகார்ச்சிறப்பும், சாத்தனார் வஞ்சிவருணனையுமே ஒத்துநோக்கக்கிடைப்பனவாயிற்று. இவை

(i) பதிற்றுப்பத்து செய்யுள் 22 வரி 6 59. 15.
(ii) பண்ணியம்=பலபண்டம்.

யிரண்டிடத்தும், இருநகரும் பட்டினங்களேயென்ப திவ்விருபெரும் புலவராலுந் தெளிவாக்கப்பட்டுளது. இவைதம்மிலொன்று பட்டினமன்றேல், மற்றதுமுண்ணாட்டூரேயாகல்வேண்டும். புதுக்கோள் யானை கதிக்குறவடித்தல் (i) இன்றுவரை மலையாளநாட்டில் நடைபெறுந்தொழிலாமன்றோ? உமணரமைக்கும் கடலுப்பும், ஆண்டுறக்குஞ்சங்குவளையும், "இலங்குநீர்முத்தமொடுவார்துகிர் (ii) எடுக்குந்தண்கடற்படப்பை மென்பாலனவும்" (iii) புதிதுபுதிதாப் பிடித்து நடைபயிற்றுமானைநிரைகளும், வேழத்துவெண்கோடு கொண்டு, பிழிநொடை கொடுக்கும்" (iv) பெற்றியும், "குன்றுதலைமணந்ததண்கடற்படப்பை" வளங்குறிப்பதல்லாற் பிறிதுண்டோ? "வேணவாயிருக்கும் விரைமரக்காவும், விண்ணவர் தங்கள் விசும்பிடமறந்து நண்ணுதற்கொத்த நன்னீரிடங்களும்,"தென்னாட்டில் "தெங்கொடுபலவுந் தங்கியபடப்பை மாறுவிளையுட் பேராறூட்டுங்" குடகடலடை கரையையே சுட்டுமன்றோ? இன்னும் ஐயங்காரவர்களே வஞ்சிச்சேரனுகத் தன்சரிதநூலிற்குறித்திருக்கும் செங்குட்டுவன்றந்தை நெடுஞ்சேரலாதனை

"கடலவுங்கல்லவும்யாற்றவும்பிறவும்
வளம்பலநிகழ்தருநனந்தலைநன்னாட்டு
விழவறுபறியாமுழவிமிழ்மூதூர்க்
கொடிநிழற்பட்டபொன்னுடைநியமத்துச்
சீர்பெறுகலிமகிழியம்புமுரசின்
வயவர்வேந்தே............" v.

என்று குமட்டூர்க்கண்ணனார் பாடியுள்ளார். ஈண்டவன் மூதூர் வஞ்சிக்கடையான முதன்மூன்றுவரிகளும், மலை கடல் மலைநாட்டாறுகள்தரும்வளம்பலவு மவ்வூரகத்தே நிறைவதாக்குறித்திருப்பது மிக்கருத்துக்கொண்ட பொருத்தமானவுண்மை நவிற்சியன்றோ? அன்றியும், பதிற்றுப்பத்துரைகாரர் "அறுஅவிளையுள், அறுஅயாணர்" vi

(i) நடைபயிற்றல்.
(ii) பவளம்.
(iii) பதிற்று. செய்யுள் 30.
(iv) பதிற்று. செய்யுள் 30 வரி 11—12.
v. பதிற்றுப்பத்து செய்யுள் 15, வரிகள் 16—21.
vi. பதிற்றுப்பத்து செய்யுள் 60, வரி—8.

என்றவடியின்கீழ், "அருஅயாணரென்பதற்கு, இடையறாத கடல் வருவாய் முதலிய செல்வங்கள்" என்றெழுதியிருப்பதும் கவனிக்கத் தக்கதாம். இன்னு மிவைவிரிப்பிற் பெருகுமென்றஞ்சி நிறுத்து வாம். இவை பலவும் சிந்திப்பார் யாரே—"கடற்கரைச்சம்பந்தம் வஞ்சிக்குக் கொஞ்சமும் காணப்படாமையே, அஃதுண்ணாட்டு நகராமென்பதை விசதமாக்கவல்லது," என்னும் ஐயங்காரவர்கள்கட்டுரையை ஆமோதிப்பார்?

---

## அ-ம் பகுதி. சேரரைப்புகழும் பழங்கவிகளில் மலைநாட்டாறுமலைகள் பாடப் பெற்றுளவா?

இன்னுமிவர்கள், தம்நூலின் 129-ம் பக்கத்தில், வஞ்சி "திருவஞ்சைக்களமாயின், அம்மலைநாட்டுநதியொன்றையும் பரணர் செங்குட்டுவனுக்குவமிக்காமல், மேற்காட்டிய (காவிரி—காஞ்சி) ஆறுகளையே கூறிச்செல்வதற்குத் தக்ககாரணம் வேண்டுமன்றோ?—என்றெழுப்பிய வினவையுஞ் சிறிது விசாரிப்பாம். சேரர்பெருந்தகைக்குப் பரணருவமித்திருப்பதாக இவர்கள்கண்ட புனனாட்டாறிரண்டு;—காவிரிக்கடலும், காஞ்சி நதியுமே. "முக்கடலனையை" என்பதையு மதன்குறிப்பையு மேலே விவரித்துள்ளோம். ஆங்குக்காட்டியபடி முக்கடலென்பது—காவிரி யாம்பிராவதிக்கூட்டமாகாதென்பதும், காவிரியைச்சொன்னது அஃதுடையசோழரைச் செங்குட்டுவன் வென்ற பெருமைதோன்றப்பாடும் பண்டைமுறையென்பது மறிந்தோம். இனி, "காஞ்சியம்பெருந்துறை மணலினும் பலவே" என்னுமடிகொண்டு, அது கருவூர்ப்பிரதேசத்துள்ள நொய்யல் அல்லது காஞ்சிமாநதியைக்குறித்ததாகக்கொள்வது துணிந்தமுடிபென்றும் தோற்றவில்லை. கருவூரே வஞ்சியெனவும், செங்குட்டுவனுக்கு மேல் கடல்தொட்டுக் கருவூர்வரைகிடந்தநிலமே நாடாயிற்றெனவுங் கட்டுரைத்த ஐயங்காரவர்களும், காவிரிசங்கமக்குங் கீழ்கடலும், காவிரியும் வளவருக்கேயுரிய வென்பார்கள். "சோணாட்டின் மேற்கெல்லை கருவூர்" என்னும் யாப்பருங்கலக்காரிகை உரைகாரர் மேற்கோளுங்

---

செங்குட்டுவன் பக்கம் 131.

காட்டி, அதன் வாயிலாக அக்கருவூருக்குமேற்குச் சேரநாடேயெனத் தங்கோளூட்டினார்கள். எனவே, கீழ்கடல் சேரன்கடலாகாதென் பதும், குடகடலொன்றே யவனுக்குரியதென்பதுமொருதலை. மேலும் நொய்யலாறு ஆம்பிராவதிபோல் காவிரியிற்கலக்குமொரு துணைச் சிற்றாறுவதன்றி, கடலிற்சங்கமிக்குந்தனியாறன்றென்றும்,—" இந் நதி (நொய்யல்) ஈரோடு கருவூர்த்தாலூகாக்கள் கூடுமிடத்து நெய்க் குப்பத்தருகில் காவிரியுடன் சங்கமமாகிறது," என்றும் தம் புத்தகத் தில் வரைந்துமுள்ளார்கள். ஈண்டுக்காஞ்சிசுட்டும்பரணர் அடிக ளைக்கவனிப்பாம்.

" நின் மலைப்பிறந்து நின்கடன் மண்டு
மலிபுனனிகழ்தருந்தீநீர்விழவிற்
.................................
தீம்புனலாயமாடுங்
காஞ்சியம்பெருந்துறைமணலினும்பலவே i

இவ்வடிகளாற் பரணர்பாடிய காஞ்சி, சேரன்மலையிலெழுந்து சேரன்கடலிற்சங்கமிக்குமொருநதம்ii என்பது தெளிவாகின்றது. ஐயங்காரவர்களின் காஞ்சியென்ற நொய்யலாறோ கிழக்கோடும் நதி யாதலான் மேலைக்கடலெட்டியும் பாராதே? உபசாரார்த்தமாகச் சோழனைவென்றசெங்குட்டுவற்குக் கீழக்கடலு முரித்தெனக்கொள் ளினுங்கூட, நொய்யலாறக்கடலையுமணுகாதே, கருவூருக்குநெடுந் தூரம் மேற்கேயே காவிரியிற்கலந்து தன்னிலையிழப்பதாகும். ஆகவே பரணர் அதை "நின் (செங்குட்டுவனின்) மலைப்பிறந்து, நின்கடன் மண்டுமலிபுனற்காஞ்சி"—என்பரோ? இதனாற் பரணர் பாட்டுடைக் காஞ்சி, மலைநாட்டாறேயாகவேண்டுமென்பது விசதமன்றோ?

இதுவேயுமன்றி, சேரவீரர்சிலர்க் கவர்வென்றிதோன்றத் தோற்றமாற்றலர் நதிமலைகளைச் சிற்சிலவிடங்களி லுவமித்திருப்பதல் லாற், பெரும்பாலும் பதிற்றுப்பத்து, சிலப்பதிகாரமுதலிய மூந்நூல்

---

துணைச்சிற்றாறு = Small Tributary.

செங்குட்டுவன் பக்கம்—122.

i பதிற்றுப்பத்து செய்யுள் 48, வரி 13—18.

ii நதம் = மேற்குமுகமாய்ஓடுமாறு.

என்பதே அயிரையாறெனவும்பேசுமியல்பும் துணிவும் வியப்பதன்றி மறுத்தல்வேண்டா? ஐயங்காரவர்களும் மலைநாட்டுநதமெனப்பேசும் பேராறு, "அயிரைமலையைத்தலையாக்கொண்டு ஒழுகப்பட்ட யாறென்று" (i) பதிற்றுப்பத்தின் பண்டையுரைகாரர் வற்புறுத்தியுள்ளதைக் குட்டுவன்சரிதநூலார் பண்டிதராகலின் மறந்தனரென்று நினைக்கவுந்துணியேம்; மறைத்ததாக்கூறுங்குறையையும் வெறுப்பேம். ஒருகால் இத்தொல்லாசிரியரையும் தம் கொள்கையொடுமுரணிய அடியார்க்குநல்லாரை யொதுக்கியதுபோற் சரிதமுறையறியாதாரென்றுகண்டு அவர் கருத்தைக் கொண்டிலர்போலும். துணிந்த மேற்கோள் பிறிதுகாணும்வரை, எம்மனோர்க்கு இப்பழையவுரையாசிரியர்கூற்று போற்றற்பாற்றும். அயிரைமலை யிவ்வாறு பேராறுற்பத்தியாகுமலையாயின், அது மலைநாட்டுமலையேயாமன்றி, குழித்தலைக்கருகாங் குன்றமாகாதன்றோ? தொல்லைநல்லாசிரியரெல்லாரும் சேரருக்குவமைகூற எடுத்தாளுமாறுகளனைத்தும் சோழன் காவிரியின் துணைச்சிற்றாறுகளாகவேகாட்டும் ஐயங்காரவர்கள் திறமிகப்பெரிதேயாம். இவர்கள் தம் நூலிலெடுத்துக்காட்டிய மேற்கோள்களொன்றேனும் மலையிற்பிறந்து கடலிற்சங்கமிக்குந் தனிப்பேராறொன்றையுங்குறித்ததாயில்லை. பழம்புலவர் சேரருக்குப் பாடிய பொருநை, அயிரை, காஞ்சியென்றனைத்துங் காவிரியிற் கலப்பதாகவே காட்டியுள்ளார்கள். சேரர் பெருநாட்டில் மேலேகாட்டியபடி செங்குட்டுவன் மிக வெறுக்குங் காவிரியிற்கலவாமல், கடலிற்புகும்யாறொன்றுமேயில்லைத்தானோ? அன்றேல் அக்காலப் புலவரனைவரும், சேரரவமதிக்குங் காவிரிச்சிறுதுணையாறுகளை யவருக்குவமிப்பதே யம்மலையரசர்பெருமைக் கேற்புடையதும் அவரை மகிழ்விப்பதுமென்று கண்டுவைத்த மாறாக்கொள்கைதானோ?

மேலும், குட்டுவருக்குப் புனனாட் டோர்பகுதிநாடாகவும், அந்நாட்டுக்கருவூரே தலைமைநகராகவும் விளங்கியதாகக்கூறும் ஐயங்காரவர்களே, தம் நூல் 2-ம் அதிகாரத்தில், "மாந்தையென்பது நார்முடிச்சேரலுக்கும், தொண்டி இரும்பொறைமரபினர்க்கும் இராஜதானிகளாக இருந்தன"வென்றும், "இவ்விரண்டுதலைநகரங்களும் கடற்கரையிலமைந்தவை"யென்றுங் கூறியுள்ளார்கள்.*

(i) பதிற்றுப்பத்து செய்யுள் 88—உரை
*பக்கம் 20.

எனவே, கருவூர்ச்சேரருக்குப் புனனாட்டுக் காவிரித்துணையாறு களையே பாடுவ தொருவாறமைவதாக்கொள்ளினுங்கூட, இத்தொண்டி மாந்தையூர்களிலாண்ட சேரருக்குரிய பாக்களிலேனும் அவர்நாட்டாறுகளையும் மலைகளையுமே சிறப்பித்துக்கூற எதிர்பார்ப்பது முறையாகுமன்றோ? ஐயங்காரவர்களும், அரசரை அவரவர் "தேசத்திலும் நகரத்திலுமோடும் நதிகளோடும் உவமித்து"ச் சிறப்பித்தல் "முற்காலவழக்கு" என்றெழுதியுள்ளார்கள். (i) இம்முறை வைத்துநோக்க, அயிரையாறு, அயிரை நேரிமலைகள், வஞ்சிமூதூர் இவைகளனைத்தும் இத்தொண்டிமாந்தைப்பட்டினச் சேரரையே பாடிய கபிலர்,அரிசில்கிழார்,பெருங்குன்றூர்கிழார் பாக்களில்(ii) சிறப்பிக்கப்பட்டிருக்கக்காண்கின்றோம். இஃதொன்றே இவை, "தண்கடற் படப்பை நாடுகிழவோ"ரான சேரர்மலைநாட்டேயுள்ளவை யென்பதை விசதமாக்கவல்லதன்றோ? இவ்வாறன்றி, இவை மேற்குமலைத்தொடருக்குக்கிழக்கே புனனாட்டுளவாமாயின், இந் நாட்டுக்குரியரல்லாத கடற்கரைத்துறைமுகச் சேரரை இவைகொண்டுபாடுவதும், வேறிவர் சொந்தமலைநாட்டாறு மலையொன்றையு முவமியாமையும் விளங்காப் புதிர்களாமன்றோ! கருவூர்ச்சேரர், தொண்டிச்சேரர், எனச்"சேர நாட்டில், வேறுவேறு தலைநகரங்களில்"இருகுலமன்னர் ஒருகாலத்தே மலைநாட்டைப் பங்கிட்டு "ஆட்சிபுரிந்த"துபோலக் குறிப்பிடும் ஐயங்காரவர்கள் கூற்றை யாராயுமிடமிஃதன்றெனவிடுப்பேம். அஃதெவ்வாறாயினுமிதுவரைகூறியவாற்றால், சேரருக்குரியமலைநாட்டாறுகள் நதிகள் நகரங்களையே பெரும்பாலும் பழம்புலவர் அவருக்குவமித்துள்ளார்களென்பதும், உவமியாததாகக்கொண்டு அதனாலவர் மலைநாட்டுரிமைமறுத்துப் புனனாட்டோர்பகுதியுடையராகவும் அவர் தலைநகராம்வஞ்சி மலைநாட்டுவஞ்சைக்களமாகாமற் புனனாட்டுக் கருவூரானிலையேயாகவுங் கருதுவதாராய்ச்சிமுறைக்கு மாறுபட்டதென்பதும், தெளிவாகின்றன.

---

(i) பக்கம் 122.

(ii) பதிற்றுப்பத்து 7-ம் பத்து 8-ம்பத்து 9-ம் பத்துப்பாட்டுக்கள்.

## ௬-ம் பகுதி. "ஒருநூற்றுநாற்பது யோசனைவிரிந்த" தெது?

இனி, செங்குட்டுவன் "மலைவளங்காண்டல்வேண்டி, பேரியாற் றங்கரை சென்றானென்று சிலப்பதிகாரம் குறிப்பது" காட்டி, "மேற்குமலைத்தொடரினடிவாரத்துப் பேரியாற்றங்கரையிலுள்ள திருக்கரூரே வஞ்சியாதல்வேண்டும்" என்ற ஸ்ரீ கனகசபைப்பிள்ளை யவர்கள் கொள்கையை ஐயங்காரவர்கள் மறுப்பது மிகப்பொருத் தமும், யாவருக்குமுடன்பாடுமாம். பிள்ளையவர்கள் கருதியபடி மலைச்சாரற்றிருக்கரூரே வஞ்சியாமாயின், மலைச்சோலைவிளையாட்டு விரும்பிய செங்குட்டுவன் வஞ்சிநீங்கி வழிநடந்துவந்து மலைகண்டு பேராற்றங்கரையிற்றங்கினனென்று இளங்கோவடிகள் கூறுவரோ?

"மஞ்சுசூழ்சோலைமலைகாண்குவமெனப்
... ... ... ...
வஞ்சிமுற்றநீங்கிச்செல்வோன்
... ... ... ...
விளையாட்டுவிரும்பியவிறல்வேல்வானவன்,
... ... ... ...
ஒருநூற்றுநாற்பதியோசனைவிரிந்த
பெருமால்களிற்றுப்பெயர்வோன்போன்று,
கோங்கம்வேங்கைதூங்கிணர்க்கொன்றை
நாகந்திலகநறுங்காழார
முதிர்பூம்பரப்பினொழுகுபுனலொழித்து,
மதுகரஞிமிறொடுவண்டினம்பாட
நெடியோன்மார்பிலாரம்போன்று,
பெருமலைவிலங்கியபேரியாற்றங்கரை
யிடுமணலெக்கரியைந்தொருங்கிருப்ப" (i)

என்பது மூலம். இதனாற் கிடைப்பன, வஞ்சி, மலையருகில்லா வூரென்பதும், மலைவளமலர்ப்பொழில்விளையாட்டுவிரும்பிய செங் குட்டுவன் அதுதேடி மலைவாரப் பேராற்றங்கரை வந்துற்றனனென் பதுமே. இதுவே உண்மைக்கும், பேராற்றின் கழிமுக(ii) வஞ்சி யமைப்புக்கும், மலைநிலக்கிடப்புக்கும் (Topography) பொருத்த முடையதாகும். "இதனால்," ஐயங்காரவர்கள், "வஞ்சியென்பது ஆம்பிராவதியல்லது ஆன்பொருநைப்பக்கத்ததும், மலைவளமில்லாதது மான கருவூரேயாதல் திண்ண" மென்றெவ்வாறு பெற்றனர்களோ

---

பக்கங்கள் 126—127.

(i) சிலப்பு காட்.சிக்காதை 25. வரிகள் 7—9—11 15 முதல் 23.

வறியேம். கருவூரானிலை மலைவளமில்லாதது : செங்குட்டுவன்வஞ்சியு மலைவாரத்தில்லாததே. இவ்வொருபுடை யொற்றுமையாலிரண்டூருமொன்றெனல் போதருமாறென்னே? மலைவளமில்லாவூரெல்லாம் வஞ்சியாமோ? அன்றியும், வஞ்சி மலைச்சாரலில்லாததாயினும், அடிகள் குறித்தபடியே பேராறு மலையினின்று விலங்குமிடத்திற்கு மிகத் தூரமில்லாத கடற்படுமலிமுகத்தூரேயா மென்பர் அடியார்க்கு நல்லார். கருவூரானிலையோ, அவ்விடத்திற்கு வெகுதூரத்திற் புனலூட்டியிருப்பதாகும். இம்முரண்பாடுகண்ட செங்குட்டுவன்சரித நூலார், சிறிதுந் தளர்கிலர்: "கருவூருக்கும்[i] பேரியாற்றங்கரைக்கும் பெருந்தூரமுண்டென்பதை இளங்கோவடிகள் குறிப்பிப்ப"தாகக் கூறியமைவார். முதலில், இக்குறிப்பிருப்பினுமதனாற் கருவூரானிலை வஞ்சியெனப்பெறுமாறில்லை. மலைவாரத்தில்லாத வஞ்சிப்பட்டினம், பேராற்றினுற்பத்திமலைக்குச் சேய்மைத்தாகலாம். இனி இச்சேய்மைக்குறிப்புத்தானென்னே ? மேற்காட்டிய சிலப்பதிகாரக்காட்சிக் காதையடிகளில், " ஒருநூற்றுநாற்பது யோசனைவிரிந்த பெருமால் களிற்றுப் பெயர்வோன்போன்று" என்னுந் தொடர்கொண்டு, "இந்திரனுக்கேயத்தொடர்விசேடிக்கப்பட்டதாயினும், அத்தொகையினளவு தூரத்தை அடிகள் சேரன் பிரயாணத்துக்குவமித்திருப்பது, அவன் சென்றுவந்த பேரியாற்றங்கரை வஞ்சிமாநகர்க்குச் சமீபித்ததன்று என்பதை வெளியாக்குமென்பதில் ஐயமில்லை " என்று தெளிந்து, இத்தொடர் "இந்திரனது யானைப்பரப்பின் தூரத்தைக் குறிப்பதென்பதினும், செங்குட்டுவனது பிரயாணதூரத்தைக் குறிப்பதென்பதே பொருத்தமாகும்" என்று தீர்மானிக்கின்றார்கள். "இந்திரனுக்கேயத்தொடர் விசேடிக்கப்பட்ட"தென்று இவர்களேகண்டபிறகு, இதினின் றெவ்விதவிவகாரமுமெழாதெனக்காணுமை யேனோ? இது நிற்க, இந்திரனுக்கித்தொடர் விசேடணமாகாதென்பதே யெங் கருத்து. மேற்காட்டிய அடிகளை யுற்றுநோக்கின், 'ஒருநூற்றுநாற்பதுயோசனை விரிந்த' என்னுந்தொடர், "பேரியாறு விலங்கிய பெருமலை"த் தொடரையேனும், பேரியாற்றினொழுக்கையேனுமே விசேடிப்பதென்றெளிதிற்றோன்றும். " பெயர்வோன்போன்று, ஆரம் போன்று, ஒருநூற்றுநாற்பதியோசனைவிரிந்த=பெருமலைவிலங்கிய

---

i பக்கம் 129.

பக்கம் 128.

பேரியாறு" என்றேனும்,—பெயர்வோன்போன்று, ஆரம்போன்று, பெருமலைவிலங்கிய ஒருநூற்றுநாற்பதியோசனைவிரிந்தபேரியாறு" என்றேனுங்கூட்டி முடிக்கப்பொருள் சிறப்பதோடு, "கோங்கம் வேங் கைதூங்கிணர்க்கொன்றை" யாதி இடைநிற்குந்தொடர்களின் முடி புக்குமேற்பமுடியும். எவ்வாறுயினும், செங்குட்டுவன்பிரயாண தூரத்தைக் குறிப்பதாகாது. செங்குட்டுவனுக் கித்தொடரை விசே டணமாக்குவதானுலுங்கூட, "பாங்தொருங்கீண்டி(யஅவன்) பைந் தொடியாய"த்தின் பரப்பே குறிப்பதல்லால், அவ்வாயமுமவனுஞ் சென்ற பிரயாண மொத்தத்தூரத்தைக் குறிப்பதாக்கொள்வதெப் படிக்கூடும்? இத்தொடரின் தொகையளவு மொத்தப்பிரயாணதூரத் தையே குறிக்குமெனக்கொள்ளின், போனவழியளவொன்றைமட் டுமோ, அன்றிப்போய்மீண்டவழியி னிரட்டிப்புத் தூரத்தளவையோ குறிப்பதாகும்? இத்தொடர் செங்குட்டுவன்மேலதாங்கால், அவ னுடன்சென்ற ஆயத்தின்பெருக்குநின்ற பரப்பைச் சிறப்பித்த புனைந்துரையெனலாமல்லால், தொகை திட்டமான ஒருபிரயாண தூர அளவையே குறிப்பதெனலெனைத்தானும் பொருத்தமின்றும். விளை யாட்டுவிரும்பிச்சென்றசேரன் தானையொடுபெயர்ந்ததாகக் கவி கூறிற்றில்லை: பைந்தொடியாயமொடு சென்றதாகவே கூறக்காண்கின் றேம். இளங்கோவடிகளிவ்வாயப்பரப்பிற் கித்தனையபூதகற்பனை சொல்லுமியல்புடையவருமில்லை. இதைநினைத்துப்போலும் ஐயங் காரவர்கள், "இளங்கோவடிகள் தம் தமையனது வடயாத்திரையை வருணிக்குமிடத்து"(i) இத்தொடர் கூறினதாக அமைத்துக்கொண் டுளார்கள். வடயாத்திரையிற் செங்குட்டுவன் பெருந்தானையொடு பெயர்ந்தானுகவே, தானைப்பெருக்கைத் தானப்பெருக்காற் புனைந் துரைத்ததாகவேனுங்கொள்ளக் கருதினார்கள்போலும். எனில் இ; தொடர் வடயாத்திரைக்குச் சிறிதும் சம்பந்தமில்லாத காட்சிக் காதையிற் பெண்டிரொடு பொழில்விளையாட்டுவேட்டுச்சென்ற சேரன்போய்ப் பேராற்றங்கரையிற் றங்கியதைக் குறிக்குமிடத்துள்ள தேயாம். இன்னுமிவர்கள் தங்கருத்துப்படி இத்தொடரிலுள்ள தொகை சேரன் பிரயாணதூரத்தையேகுறிப்பதாக்கொள்வதற்குப் பின்னுமோரிடையூறுண்மையுங் காண்கின்றூர்கள். கருவூரானிலைக்கும்

---

ஆயம்=பெண்டிர் கூட்டம்.

(i) பக்கம் 128.

மலைவாரப் போற்றங்கரைக்கும் "உத்தேசம் 300-மைலா"கக்கண்டு வைத்தும், கிடைத்தவொருவரியை யுபயோகியாமல்விட மனந் தாழாது, அடிகளின் "ஒருநூற்றுநாற்பதியோசனை"க்கும், இம் மூன்னூறுமைற்றூரத்திற்கு மொற்றுமைசிருஷ்டிக்கப் பகீரத முயற்சிமேற்கொள்வாரானார்கள். சான்றுகூட்டியவழி யுண்மை காணாது, கொண்டதோர்கொள்கைக்குச்சான்றுதேடுந்தாளாண்மை யிடரே வளர்ப்பதன்றோ? யோசனையளவு முன்யோசியாவாறிடர்ப் படுத்தக்கண்டுவைத்துஞ் சிறிதுமனஞ்சலியாமல்; "இளங்கோவடி களர்காலத்து ஒருயோசனையளவு $2\frac{1}{2}$-மைலுக்குட்பட்டதாகவிருந்தது போலும்" (i) என்றோர் சமயோசிதவூகனமொன்றுகொண்டமைதி கண்டவர்களின் தளராமனவலி யெம்மால் வியக்குந்தரமன்று. முத லில், கருவூரானிலேயே வஞ்சியெனச் சாதிப்பதற்குச் சிலப்பதிகார வரியை யுபயோகிக்கமுயன்றார்கள். பிறகு இத்தொடரிடர்தரக்கண்டு, இத்தொடரளவு கருவூருக்குப்பொருந்துமாறு, கருவூர்த்தூரத்தை வைத்து, யோசனையளவறுத்து, இதற்குரைகாண முன்வந்தார்கள். இவ்வனுமானயோசனையளவுக்காதாரம் இவர்கள் சாதிக்கமுயலுங் கொள்கைபடுமிடரன்றிப் பிறிதுகாணேம். புதிதொரு துணிபுநாட் டப் பலபுதுத்துணிபுகாட்டுங் கற்பிதத்திறனு மதனாலாயவிடர்ப்பாடும் பிறிதெவரையுஞ் சலிப்பிக்குமென்பதிலையமில்லை. ஐயங்காரவர்களோ, இவையனைத்துங்கண்டுவைத்தும்,"கருவூரையடுத்து ஆம்பிராவதியுங் காவிரியுங் கலக்கும் கூடலையும், நொய்யல் அல்லது காஞ்சிமாநதியை யும் பரணர் செங்குட்டுவனுக்குவமையாகக் கூறியிருத்தலும், ஆந் பொருநைக்கரையில் வஞ்சியுள்ளதாகச் சொல்லப்படுதலும், கரு வூருக்கும் பேரியாற்றுக்கும் பெருந்தூரமுண்டென்பதை யிளங் கோவடிகள் குறிப்பிப்பதும், சேரரது பழையதலைநகரம் அந்நதிகள் பாயுமிடங்களுக்குப் பக்கத்தது என்பதற்குத் தக்க சான்றாதல் காண லாம்," என்று தெளிகின்றார்கள். (ii) "முக்கூடல்" "காஞ்சி" "ஆந் பொருநை" இவைகளைப்பற்றியு மிவைகருவூரானிலை வஞ்சியென்று நாட்டற்பாலனவன்றென்பதும் மேலே காட்டியுள்ளேம். "கருவூர்க் கும்" பேரியாற்றங்கரைக்கும் பெருந்தூரமுண்டென்பதை இளங்கோ

(i) பக்கம் 129.
ஊகனம் = அனுமித்தல்.
(ii) பக்கம் 129.

வடிகள் சிறப்பிப்பதா"கச்சொன்னதை யாராய்ந்தளந்து, அதுவும் இவர்கள் புதுக்கொள்கைக்குதவாமை கண்டுகொண்டோம்.

மேலும், திருவானிலையே வஞ்சிநகரும், அக்காநலூர்ப் பிரதேசமுமதன் மேற்கும் சேரர் தேசமுமேயாமாகில்,—"மஞ்சுசூழ்சோலைமலை காண்குவமென வஞ்சிமுற்றநீங்கி"ச்செல்லுஞ் செங்குட்டுவன், பெண்ணை, பாலாறு, காவிரி (ஐயங்காரவர்கள் கொள்கைப்படி யவனுக்கேயுரிய) ஆம்பிராவதி, மணிமுத்தாறு, குடவனாறு, நொய்யலாறு முதலிய பல அற்புதநதிகளுற்பத்தியாவதும், வளனுங்கவினும் வளர்ந்து திகழ்வதுமான மேற்குமலைத்தொடரின் கிழக்கடிவார நெடும்பரப்பின் சாரலனைத்தையுமகற்றி, மலையேறி, மேற்கிறங்கிப் பேரியாற்றங்கரைவந்து தங்கக் காரணந்தானென்னையோ? விளையாட்டு விருப்பியுடன்போந்த பைந்தொடியாயத்தார் சமநிலப்பரப்பினிடைந்தமாமரச்சோலையிடையேயொழுகு மாம்பிராவதியினழகுகிழுமரும்பழமுங்கண்டுமகிழாரெனநினைத்தோ, அவரைப் பெருமலைத்தொடரேறிக்கடந்து மலைநாட்டிறங்கிக் கோங்கும்வேங்கையுஞ்செறிந்தபேராற்றின் மணற்கரையிலிறங்கச்செய்தது? ஆற்றல்போலறிவுடையதமிழ்க்கோமான், இவ்வாறு, தன்னூர்விட்டு, வெறும்விளையாட்டொன்றிற்காக 30௦-மைல் தூரம் பெண்டிரொடு வழிநடந்து, மலைகடந்து, களைத்துமீளக்கருதுவதியல்பா?—அன்றி, பேராற்றின் கழிமுகத்தூருடையான், மலைவளம் வேட்டபோது, நெடுந்தூரஞ் செலவேண்டாத அவ்வாற்றினுற்பத்திமலைச் சாரலுக்குச்சென்று களித்து மீண்டனன் எனக்கொள்வது முறையா?—என்று சிந்திப்பார்க்கு வஞ்சி கருவூரானிலையாகாதென்பது தெற்றென விளங்கும்.

---

## ௧௦ ம் பகுதி "ஆடகமாடம்—அரசவணமா"?

இனி, "ஆடகமாடத் தறிதுயிலமர்ந்தோன், சேடங்கொண்டு சிலர்நின்றேத்த"(i)—என்னும் கால்கோட்காதைவரிகளையும், அவற்றிற்கு அரும்பதவுரையில் "ஆடகமாடம் திருவநந்தபுரம்"(ii) என்றுள்ளகுறிப்பையுங்காட்டி, "அக்கோயில் வஞ்சியாகிய கருவூருக்குப் பக்கத்திருந்ததாகுமேயல்லது 300-மைலுக்கப்பாலுள்ள திருவநந்தபுரமாகாதென்பது திண்ணம்": ஆதலால், 'கருவூர்க்குக்கிழக்கே அரச

---

(i) சிலப்புகாதை 26, 62, 63. (ii) சிலப்பு அரும்பதவுரை பக்கம் 68.

வனம் என்னும் பிரதேசத்தில் திருமால் ஆலயமொன்றுண்டு என்று கருவூர்ப்புராணங் கூறுகின்ற' "அரங்காதப்பெருமாள்சந்நிதியே பழைய ஆடகமாடமாகக்கொள்ளுதல் பொருந்துமெனலாம்"(i)— என்றுகூறித் தங்கொள்கைக் கிதுவுமொரு பற்றுக்கோடாகக்கொள் கின்றார்கள். இதில் எத்தனைதருக்கப்பேய்த்தேர்களமைந்துகிடக்கின் றனவென்று நிதானிப்பார்களில்லை. முதலில், கருவூரானிலைதான் வஞ்சியென்பது இனி அவர்கள் தக்கசான்றுகொண்டு நிறுவக்கிடக்கு மொரு புதுக்கொள்கையென்பதைமறந்து, அது யாவருந்துணிந்த சித்தாந்தம்போலக்கொண்டமைந்தார்கள். அதன்மேல், தன் புதுக் கொள்கையென்பதற்காதரவாகக்கொண்ட இச் சிலப்பதிகாரக்குறிப் புத் தனக்குதவாமைகண்டு, ஆடகமாட மொருநாள்வழிப்பயணத்திற் குட்பட்டதாகவேண்டுமாகையாலும், கருவூரானிலையதோர் பெரு மாள்கோவிலிருப்பதாலும், இக்கருவூரே சிலப்பதிகாரத்திற்கண்ட வஞ்சியாகவேண்டுமென்று துணிவாரானார்கள். செங்குட்டுவன் வடக்கே புறப்படுவதற்கு ஒரேநாளைக்குமுன்புதான் பயணம் பிரஸ் தாபிக்கப்பட்டதென்ற ஆதாரம் யாண்டுக்கண்டார்களோ? இவன் மலைக்குறவரிடம் கண்ணகி விண்ணடைசென்ற விபரங்கேட்டதும். வஞ்சிக்குத்திரும்புமுன்னரே வடதிசைக்குப் படிமக்கல் கொணர் வான் புறப்படுமுறுதிசெய்துவிட்டதாகவன்றோ சிலப்பதிகாரக் காட் சிக்காதை கூறுகின்றது: அத் தகவலெட்டி யனந்தபுரக்கோவி லர்ச் சகர் தம்மாசருக்கு விஜயங்கூறிப் பிரசாதங்கொணர்ந்திருக்கலாகாதா? பதிற்றுப்பத்தினும்புகழும் மலைநாட்டநந்தபுரமே(ii) யாடகமாடமா காமல், ஆனிலைக்கருகோர் சிறுகோயிலேயாமாறென்னே? பெரு மாளுக்குக்கோயில் கருவூரானிலைக்கருகுமட்டுந்தானுளதோ? அரும் பதவுரைகாரரே ஆடகமாடத்தை மலைநாட்டோரய இரவிபுரமென் பாருமுளரென்று காட்டியகுறிப்பை யிவர்கள் கவனியாததேனோ? கடற்கரைவஞ்சிக்கருகே அரவணைகிடந்தானுக்குக் கோவிலே கிடை யாதென்பது இவர்களாற் சித்தாந்தஞ்செய்யப்படவில்லை; ஆராயப்பட் டதாயுமில்லை. இதனாற் கருவூரானிலையே வஞ்சியென்றுயவகை இனி யிவர்கள்காட்ட வெதிர்பார்த்து, அதுவரை பொறுமைகொள்வோம்.

---

(i) பக்கங்கள் 122, 123.

(ii) பதிற்றுப்பத்து செய்யுள்—31.

## கக-ம் பகுதி. சேரர்நாடு மலைநாடே.

இறுதியாக, "கொடுங்கோளூர் என்றபெயரே பழைய நூல்களுக்குச் சிறிதுந் தெரியாததொன்றாகும். இதனையடுத்துள்ள திருவஞ்சைக்களத்துக்கும் வஞ்சிக்கும் எவ்விதப்பொருத்தமும் இல்லாமையால் சரித்திரவறிஞர் அவ்விரண்டனையும் பொருத்தியெழுதுவனவெல்லாம் முன்னைவழக்கோடு முரணுவதேயென்க" (i) என்று கட்டுரைத்தார்கள். வஞ்சிக்கும் வஞ்சைக்களத்திற்கும் எவ்விதப்பொருத்தமுமில்லாமைக்கிவர்கள்கண்ட "முன்னையவழக்கு"த்தான் யாதோ? கூறினார்களில்லை. கூறுங்கா லதனை யாராய்வாம். இவைதமக்குள்ள பொருத்தத்தைப் பற்றிக் கீழேவிசாரிப்பேம். ஈண்டு, பழைய நூல்களில் கொடுங்கோளூர் என்றபெயர் காணாமையா லவர்கள்கொள்ளு மனுமானப்பலனைமட்டு மாராய்வோம். அஸ்தினபுரம், மிதிலை, பாடலிபுரமிவற்றின் பிற்காலப் பெயர்கள் வியாசர்வான்மீகரிதிகாசமுதலிய பழைய நூல்களிற் காணப் படுகின்றனவா? கொடுங்கோளூரைச்சொல்லும் பெரியபுராணத்திலு மிவ்வூர்க் கிக்காலத்துவழங்கப்பெறுங் 'கொடுங்கலூர்' என்றபெயரே னும், ஆங்கிலப்பயிற்சியுடையார் பரவச்செய்யும் 'கிராங்கனூர்' (Cranganore) என்றபெயரேனும் கூறப்பட்டுள்ளதா? ஒருநூலுக்குப்பின் னெழும்பெயரை யந்நூலாசிரியர் முன்னுணர்ந்துகூறுந் தீர்க்கதரிசனம் பெறாமைகொண்டு, அவ்வூர் அந்நூற்காலத்தில்லையெனவாதிப்பது தருக்கமுறையாமா? கொடுங்கோளூர் என்றபெயர் எக்காலத்தெப்படி யெழுந்ததென்றவாராய்ச்சி ஈண்டு நிகழாது: நிகழ்வ தின்றியமையா ததுமன்றாம். ஆனால் சேக்கிழார், அடியார்க்குநல்லார் முதலிய தொல் லாசிரிய ரிவ்வூரே சங்ககாலத்து வஞ்சியூர் என்று விதந்துகூறினதே போதியசான்றாம் "முன்னையவழக்கு" மாமன்றோ? ஐயங்காரவர்கள்கூடத் தந்நூலில், "இக் கருவூரின்ஸ்தானத்தில் மலைநாட்டுக்கொடுங்கோளூர் சேரராஜதானியாகப் பின்னூல்களிற்கூறப்படுதல் காணலாம்" (ii) என் றிதற் காதாரமுண்மையை அங்கீகரிக்கின்றார்கள். ஆனாலிது தன்னபி மானக்கொள்கையொடு முரணுவதுகண்டு, "சங்ககாலத்துக்குப்பின் னர்ச் சோழராற்றறற்கஞ்சிய சேரர், வஞ்சியைவிட்டு நீங்கி, தங்கட்குரிய

(i) பக்கம் 133.

(ii) பக்கம் 131.

மலைநாட்டிற் கடற்கரையிலுள்ள கொடுங்கோளூரைத் தலைமைநகரமாக் கொள்ளலாயினர்" (i) என்றுகூறித் தாங்கண்ட நல்லாசிரியர்மேற் கோள்களினின்றுந்தப்ப வழிதேடுகின்றார்கள். இது சரிதநூற்றுணை பெற்றுளதே லிவர்கள்யோசனைபலிப்ப தொருவேளை சாத்தியமாகும். சோழராதிக்கம்பெருகியதெல்லாம் கி. பி. 9 அல்லது 10-ம்நூற்றாண் டிற்குப்பின்னரேயென்ப திதுவரை சரிதநூல்கண்ட துணிபு. ஆனால் சேரவீரர் சிலர் இடையிடையே சோழர்முதலிய கீணாட்டுமன்னர்மேற் பெற்ற வெற்றிப்பெற்றியல்லால், சாஸ்வதமாகக் கொங்குநாட்டிற்குக் கிழக்கே யாதொருபாகத்தையுமவர்களாண்டதாக யாதொருநூலிலும் சாஸனங்களிலுங் கூறக்காணேம். கருவூரானிலைச்சாஸனங்களெல் லாம் சோழரே தந்துளவாகவும், சேரராதிக்கக்குறிப்பொன்றுமவை கூறிலவாகவும் ஐயங்காரவர்களே எழுதியிருப்பதை (ii) மேலேகாட்டி யுள்ளோம். இனிச் சோழர், சேரரைத் தந்நாடும் நகரமும் விட்டோடச் செய்து, அவர் பழவிறன்மூதூருங்கொண்ட மறக்கொணுப்பெரு வெற்றியை நூல்யாவும்,சாஸனங்களும்,சரிதவுபகரணமனைத்தும் மறந்த நிந்தைக்கு, அதை இவர்கள் மீளக்கண் டுலகுக்குதவியவிந்தையன்றி வேறுவமையுண்டோ? "சோழராதிக்கம்பெருகியபோது கருவூர் சோணாட்டின் முக்கியநகரங்களுள் ஒன்றானசெய்தி சாஸனங்களாலும் நூல்களாலுந் தெரிகின்றது" என்றும் "10-ம்நூற்றாண்டின் தொடக் கத்தில் கருவூர் சோணாட்டைச்சார்ந்ததென்பர் சாஸனப்பரிசோத கர்" (iii) என்றும் எழுதிய குட்டுவன்சரிதநூலார், இக்கருவூரானிலை என்றைக்காவது சேரரூராயிருந்ததற்கு யாதோராதாரமுங் கூறா தகன்றது, அவர்கட் கிது சான்றுவேண்டாச்சரிதவுண்மையாகத் தோற்றிய துணிபேபோலும். இவர்களத்துணை நுணுகிய சரிதமதி யில்லார்க் கிதனைச் சிறிதுவிளக்கியிருப்பின் மிகவுமுபகாரமாகியிருக்கும். "இவ்வூர்த்திருவானிலைக்கோயிலைப்பற்றியதேவாரப்பதிகங்களிலேனும்

(i) பக்கம் 132.
(ii) பக்கம் 124, 131.
(iii) பக்கம் 131.

வஞ்சியின்பழஞ்செய்தி சிறிதுங் குறிக்கப்பட்டிருக்கவில்லை"(i) யென் றிவர்களேபரிதபிப்பதை மேலுங் காட்டியுள்ளேம். சோழருக்குக்கருவூ ரானிலை சொந்தமென்றவரையே பழநூலாதாரவுகிடைக்கின்றதென்ப திவர்கட்கும் எமக்கு முடன்பாடாம்: ஆனல் முன்னொருகாலத்தி லிவ்வூர் சேரருக்குரியதாயிருந்திருக்கவேண்டுமென் றிவர்களனுமிக்கு மிடத்தேதான் வேறுபடுவாம். கிடைத்த பழநூன்மேற்கோள்களெல்லா மோருரை யொருகுலத்தரசருக்குரியதாக்கவும், அதற்குமாறான பழங் கொள்கை யாண்டுமிலதாகவுங்காணுமிடத்தே, அவ்வூர் அவ்வரசருக் கிடையிட்டுக்கிடைத்ததான மேற்கோள் கண்டாலன்றி யவருக் கஃ தாதிதொட்டிருந்ததெனக்கொள்ளுவதே சரித நூலாராயுமுறை. ஆனிலைக்கருவூருக்குச் சோழர்சம்பந்தம் சாஸனக்காரர்கண்ட 10-ம் நூற்றாண்டிற்கும் வெகுகாலத்திற்குமுன்னதென்பதை மேலே பெரிய புராணப்பாக்களாற் றெளிவாக்கியிருக்கின்றேம்.* சாஸனங்களும், நூல் களும் ஆனிலைக்கருவூரைச் சோழராதிக்கம்பெருகியபோ தவர் முக்கிய நகரங்களுளொன்றாகக்கூறுவதற்கும், அதற்குமுன் அவ்வூரை யத் துணைபாராட்டாமைக்கும் தக்ககாரணமுண்டு. சோழரைப்பாடும்புல வர் சோணாட்டூரெதுவுங்கொண்டுபாடுவரென்றுநினைப்பது முறையா காது. சோழரைப்புகழ்ந்தபுலவராற் பாடப்பெறாமைகொண் டோரூர் சோணாட்டதன்றெனமறுப்பதும் மரபன்றாகும். பாடுவார்–பாடுமரசர் பீடுபெறுமூதூர்களைமட்டுஞ் சுட்டிப்பாடுதலே பெருவழக்காம். சோழ ருக் காதியிற் புகாருமுறந்தையுமே தலைநகரங்களாயிருந்தபோ தவை களே பாடப்பெற்றன. பிற்காலத்தே யவர் தமக்கமைத்துக்கொண்ட ராஜதானிகளாகிய காஞ்சி, கருவூர்களை யக்காலநூல்கள் பாராட்டுகின் றன. புகார் தலைநகராயிருந்தபோதெழுந்தசங்கநூல்களிற் கருவூ ரானிலை பாடப்பெறாமை யென்னவிந்தை? பாடப்பெற்றிருப்பினன்றோ வியப்பைத்தரும். பழைய நூல்களெல்லாம், பாண்டியருக்கு மதுரை

(i) பக்கம் 130, 131.

* இப்புத்தகம் பக்கம் 18, 19 பார்க்க.

கொற்கைகளையும், சோழருக் குறந்தை புகார்களையும், சேரருக்கு வஞ்சி தொண்டி மாந்தைகளையுமே சுட்டிப்பாராட்டுகின்றன. இதனு ளிம் மூவேந்தர்நாடுகளினு மிவைதவிர்த் தூர்களேயில்லையெனச் சாதிக் கத்துணிவாருண்டோ? புலவர்பாடுங்கால், பாட்டுடைத்தலைவர்பரம் பரைமூதூராதல்,அன்னவர் ஒன்னலர்வாய்க்கவர்ந்த வெற்றிப்பெற்றிய நல்லூராதல்பற்றிப் பாடுவதே அடிப்பட்டதொல்லைமுறை. இக்கருவூ ரானிலை, "வடதிசையெல்லையிமயமாகத், தென்னங்குமரியொடாயிடை யரசர், சொல்பலநாட்டைத்தொல்கவினழித்த, போரடுதானைப்பொலந் தார்க்குட்டுவ"(i)ர்க்குரிய தலைநகராயிருந்து, அவரைப் போர்வென்ற சோழராற்கோட்பட்டபிறகே யவர்க்குரியதாயிருப்பின், இப்பெரு வெற்றிபாராட்டிப்பாடுவதைவிட்டு மேற்காட்டியுள்ளபடி அச்சோழ குலபரம்பரையில் என்றும்நின்றவூராகவே சேக்கிழார்பாடிச் சரிதவுண் மையுஞ் சோழர்வன்மையு மொருங்கழிக்கவொருப்படாரன்றே?

இவைபலவும்புறக்கணித்த குட்டுவன்சரிதநூலார், அரசராவார் தத்தம் நாட்டகத்தே தலைநகரமைப்பதல்லால், மலையரசர் புனல்நாட்டிற் றலைநகரமைத்துவாழ்வதெனல் நம்பிக்கையைச் சிறிது தம்பிக்கச்செய்யு மென்றுணர்ந்து, " இக்கருவூரைச்சூழ்ந்தவெங்காலநாடு......சோழ ராதிக்கத்துக்குமுன்பு...........கொங்குதேசராஜாக்களாட்சிக்குட்பட் டிருந்ததென்றும், அவர்க்குமுற்பட்ட சங்ககாலத்தே......சேரரது சிறந்ததேசமாகி, வஞ்சியெனப்பட்ட இக்கருவூரைத் தலைமைநகரமாக் கிக்கொண்டுவிளங்கியதென்று மறியத்தக்கன,"(ii) என் றோர்சமாதான மமைத்துவைத்தார். இதில், "வஞ்சியெனப்பட்ட இக் கருவூரைத் தலைமைநகரமாக்கி" என் றிவர்களொருதலையாத்துணிந்துகொண்ட குறிப்பே, இவ்வாறு பலவிடத்தும் பாந்திப்பாந்தி இன்னபல அடிப் படையற்றிடர்ப்பட்டலமருவதாம்புதுத்துணிபுகளை யிவர்கள் வாரி யிறைத்திருப்பதை நன்குவிளக்குகின்றது. கருவூரே வஞ்சியென்ற காட்டருங்கொள்கையை நிரூபிக்க நேர்சான்றின்மையால், அங்கு மிங்கு மதற்கு மேற்கோள்தேடிக்கண்டதாக்காட்டும் நிகழாச்சரித நிகழ்ச்சிகளால் நிரூபிக்குமுன் நிர்ணயிக்கப்பட்ட தங்கொள்கையைச் சித்தாந்தமுடிபாக் கொள்வார்கள். கருவூரை வஞ்சியெனக்கொள்வ தற்கு, அதைச்சூழ்ந்தநாடு சேரர்நாடாகக்காட்டவேண்டிய தவசிய

(i) பதிற்றுப்-செய்யுள் 43.
(ii) பக்கம் 132.

மென்றுநினைத்தார்கள். நினைக்கவே, கருவூரே வஞ்சியென நிரூபிக்குங் கருவியாக, அதைச்சூழ்ந்த வெங்காலநாட்டைச் சேரருக்குரியதாக் காட்டவந்தார்கள்: வந்தவர்கள், இது சேரநாடென்பதற்கு நிராக்ஷேப மேற்கோளின்மைகண்டு, அதனிடைக் கருவூரே வஞ்சியென்று காட்டினால் வஞ்சிவேந்தருக் கந்நாடுமுரித்தாகுமென்ற நியாயந்தோற்றியதை யாண்டிறுகப்பற்றி, நாட்டாராய்ச்சிக்குத்தக்க துணையாக்கி, அதனிடைப் புகுத்துவைத்தார்கள். ஈண்டுக் கருவூரை வஞ்சியெனவைப்பதால், கருவூர்ப்பிரதேசம் சேரர்நாடாயிற்றா? அன்றி யந்நாட்டைச் சேரர்நாடாகவைத்துக்கொண்டதாற் கருவூர் வஞ்சியாயிற்றா? இவை யிரண்டுமேனும், அன்றே லிரண்டிலொன்றேனும், தக்கபிறசான்று கொண்டுறுதியடையவேண்டும். உறுதிபெற்றவொன்றாற் பிறிதொன்றைப்பேணல்கூடும். அல்லாமல், இவைதம்மி லொன்றை யொன்றாற் சாதிக்கமுயல்வதானால் பரஸ்பரமெலிவித் திரண்டுநலிவதன்றி வலியுறும்வகை வேறுண்டோ? இவ்வாறு, நின்றொன்றும் நிரூபியாமல், சௌகரியப்படி ஒன்றைவிட்டொன்றிற் கழன்று சுழன்று வட்டத்தில் வாதிப்பதாற் கிட்டுவது வாதநட்டமேயாம். இதனை மேனாட்டுத்தருக்க நூலோர் திட்டமில்லாவட்டவாதிப்பென்றன்றோ வெறுப்பார்.

இனி, இக் கருவூர்ப்பிரதேசம் சங்ககாலத்தே சேரநாடாயிருந்ததற்காவது, இடைக்காலத்தே கொங்கரரசாட்சிக்குட்பட்டிருந்ததற்காவது இவர்கள்கண்ட மேற்கோளொன்றையும் விளக்கிக்கூறினார்களில்லை. இக் கருவூர்ப்பிரதேசம் சிலகாலம் கொங்கரரசாட்சிக்குட்பட்டிருந்ததாகக்கொண்டதற்காதரவாக, தந்நூலினடிக்குறிப்பொன்றில், 'கருவூர், கொங்குநாட்டுத்தலங்களுள் ஒன்றாகக் கூறப்படுதல்காண்க'(i) என்று பொதுப்படக்கூறிவைத்தார்கள். யாரால்? எப்பழநூலில்? யாண்டுக்கூறப்பட்டது? என விரித்திலர்கள். நேற்றுவெளிவந்த தேவாரத்தலமுறைப்பதிப்பில், தல அட்டவணைதொகுத்த பொறுப்பில்லாரொருவர், அவ்வட்டவணையில், கொங்குநாட்டூர்களென்ற தலைப்பின் கீழ்த் தவறி இக்கருவூரானிலையைப் பெய்துவைத்த பேராதாரமொன்றன்றிப் பிறிதுகாணுக்குட்டுவன்சரிதநூலாரிதைமேற்கோளாகவிதந்து கூறத் துணியாமற்போலும், இவ்வாறு பெயர் ஊர் ஒன்றுமின்றியொரு மேற்கோணிலையாக்காட்டித் தங்கோணிறுவ முயல்கின்றார்கள்.

---

(i) பக்கம் 132.

மறுபடியும், "சங்கநாளிலே கொங்குதேசம் குடகுநாடாயிருந்தமை, 'குடக்கொங்கரு'(i) மென்னும் அடிகள்வாக்கா லறியலாம்"(ii) என்கின்றார்கள். குடகன் என்பது சேரன் மறுபெயராகவே, 'குடக் கொங்கர்' அக்காலச் சேரருக்குட்பட்ட கொங்குநாட்டுக் குறுநிலமன்னர்பலராகலாம். கொங்குவேறு, குடகுவேறாதலால், இளங்கோவடிகள் தம் தமையன்செய்த பத்தினிக்கடவுளாராதனைக்குக் குடகரும், கொங்கரும், மாளுவவேந்தரும் வந்தனரெனக் குறித்துமிருக்கலாம். உரைபெறுகட்டுரையில், குடகடையில்லாமலே "கொங்கிளங்கோச"(iii) ரெனவேகூறப்படுதலும் கவனிக்கற்பாற்று. இதுகொண்டு கொங்குதேசம் சங்கநாளிற் குடகுநாடாயிருந்ததெனத் துணியக்கூடாமை வெளிப்படை. வஞ்சிச்சேரனுனைகுட்டுவன் பிறநாட்டாரான கொங்கரைச் செல்கெழுபோர்வென்றதாகக்கூறும் பாலைக்கௌதமனார்பாட்டும், செங்குட்டுவன்"கொங்கர்செங்களம்வேட்ட"தாய்க்கூறும் அடிகள் வாக்கும் இதை நன்குவிளக்குகின்றன.(iv) எனைத்தாயினும், இதனாற் கருவூர்ப்பிரதேசம் கொங்குநாடாதல்பெறப்படாமை யொருதலை. இதையும், கருவூர்ப்பிரதேசம் கொங்குநாடாகாமல் புனல்நாடாதலையும், நாம் மேல் ஓரிடத்து விசதப்படுத்தியிருப்பதைக்கொண்டு தெளிக.

ஈண்டு, இக்கொங்குநாட்டிற்குமேற்குள்ள மலைநாட்டரசர், இக் கருவூரைச்சூழ்ந்த வெங்காலநாட்டை நாடாகவும், அதனகத்துக்கருவூரானிலையைத் தமக்குரியதலைநகராகவுங்கொண்டிருந்தனராவென்பதைச் சிறிதுவிசாரிப்பாம்.

மேலே நாம் பலமுறைவற்புறுத்தியபடி இடையிடையே, சில சேரர்மேற் சோழர் வெற்றிகொண்டிருப்பதுபோல், சோழர்சிலரைச் சேரவீரரும் போர்வென்றதானசெய்திகிடைப்பதல்லால், புனல்நாட்டெந்தப்பகுதியையுந்தமதாக்கிச் சேரராண்டிருப்பதாக யாண்டுங் கண்டிலேம். இதற்கு நூலாதாரங்காணுதகுட்டுவன்சரிதநூலாரும், "கருவூர்ப்பசுபதீஸ்வரர்கோயிலிலுள்ள சாஸனங்களால், இக் கருவூரைச்சூழ்ந்த வெங்காலநாட்டிற்கு 'கேரளாந்தகவளநாடு' என்றும், 'சோழகேரளமண்டல' மென்றும் பெயர்கள்வழங்கி

(i) சிலப்பு 30—159.
(ii) பக்கம் 132 note.
(iii) சிலப்பு முதலிலுரைபெறு கட்டுரை.
(iv) பதிற்றுப்-செய்யுள் 22. சிலப்பு-வாழ்த்துக்காதை.

வந்தனவென்பது வெளியாகின்ற" (ii) தென்றுகாட்டி, "இப்பெயர்களால், சோழராதிக்கத்திற்குமுன்பு, கருவூர்ப்பிரதேசம் சேரருக்குச் சிறந்தபூமியாகக்கருதப்பட்டிருந்தமை பெறப்படும்" (i) என்பார்கள். இச்சாஸனப்பெயர்களின்வரலாறென்றும் அச்சாஸனங்களில் விளக்கப்பட்டதாயில்லை. 10-ம் நூற்றாண்டிற்குப்பிறகு, தமிழரசர் ஆரியவாதிக்கத்திலீடுபட்டுத் தம்வயமிழந்து, தமிழ்மணமறந்து, யாண்டுந்தமிழ்ப்பெயரறவேகளைந்து களித்தகாலத்தெழுந்த விச்சாஸனங்களில் யாதொருதொடர்பும் வரலாறுங்குறியாதெழுதப்பட்டுள பெயர்களைக்கொண்டு சங்ககாலச்சரிதநிகழ்ச்சிகளை யூகித்தறியவொண்ணாதென்பது யாவருமறிவதொன்றாம். இனி, 'கேரளாந்தகவளநாடு' எனும்பெயராற் பெறக்கூடியதுதானென்னை? கேரளனாகியசேரனுக்குஅந்தகனாய சோழனதுவளநாடென்பதே இப்பெயருக்குச்செம்பாகமானபொருள். இச்சாஸனப்பெயர்கொண்ட சோழன் தன்காலச்சேரனைவென்றவீரந்தோன்ற இப்பெயர்பூண்டிருக்கலாமென்பதும், அவ்வளவன்புனல்நாட்டின் ஒருபகுதியாய இக்கருவூர்ப்பிரதேசத்தை அவன் வளநாடெனக்குறிக்கப்பட்டதென்பதுமே இதனாற்கிடைப்பதாகும். இதுவேபோல், சோழகேரளமண்டலமென்னு மிம்மணிப்பிரவாளப்பெயர், அக்காலச்சோழன் சேரனொருவனைவென்றபுகழ்பேணநினைந்தோ, அல்லாதொருவேளை யவ்விருகுலத்தூரிமையுந் தனக்கெய்தியதாக்கொண்டதொரு பெருமைகருதிப்புனைந்தோ, இவ்வாறிச்சாஸனத்தெழுதுவித்திருக்கலாமென்று நினைக்கவிடந்தருகின்றதன்றி, இதனாற் சங்ககாலச்சேரருக் கிப்பிரதேசம் சொந்தமாயிற்றெனக்கொள்ளுமுறை புலப்படவில்லை. இவைதமக்கு எப்பொருள்கொள்ளினும், இப்பெயர்க்கிது காரணமெனச் சாஸனக்குறிப்பில்லாதவரை, எல்லாம்சமயோசிதவனுமானமாவதல்லால், இதுவேயிதன்பொருளாமென வரையறுத்துத் துணிவதற்கிடனுமில்லை; இதினின்றுபெறுவதாஞ்சரிதமோ மலடிபிள்ளை.

இக்கருவூர் சோணாட்டின்மேற்கெல்லையென் றையங்காரவர்கள் மேற்கோளுடன்கூறியிருப்பதையும், அதன்மேற்கே கொங்குநாடுண்மையையும், அக்கொங்குநாடு செங்குட்டுவனாட்சிக்குட்படாப்பிற

(i) பக்கம் 132.

நாடாயிருந்தமையையும் மேலேவிரித்துக்காட்டினேம். இக்கொங்கு நாட்டிற்கும் மேற்கே, மேற்குமலைத்தொடருக்கும் மேலக்கடலுக்கு மிடையேநின்ற மலைநாடே சேரருக்குரியநாடென்பதை, சேரரைப் பற்றிய "ஆராய்ச்சிக்குச்சிறந்தசாதனமாவ" தாக ஐயங்காரவர்களாற் பாராட்டப்படும் (i) "சிலப்பதிகாரம் மணிமேகலை பதிற்றுப்பத்து" முதலிய பழையநூல்களே விசதப்படுத்துகின்றன. இத்தொன்னூல்களில் யாண்டும் காவிரிநாட்டெப்பகுதியுஞ் சேரநாட்டிக்குட்பட்டதாகக்கூறப்படாததும் ஈண்டுச்சிந்திக்கத்தக்கது. சேரர்புகழே கூறும் பதிற்றுப்பத்திற்பலவிடத்தும், சேரருக்கு மலைநாட்டையவர்க்குரியமனைவியாகவுருவகப்படுத்திச் சிறப்பித்துப்பாடப்பட்டிருப்பது மன்றி, வேறுநாடு கூறப்பட்டதாயுமில்லை. (ii)

இதுவுமன்றி, புனல்நாடுபோற்றும் புலவரொருவர், இளஞ்சேர லிரும்பொறையைப் பாடியபாட்டொன்றில், தான் காதலிக்கும் "காவிரிப்படப்பை பநன்னுடன்ன, வளங்கெழுகுடைச்சூலடங்கிய கொள்கை, யாறியகற்பிற்றேறியநல்லிசை, வண்டார்கூந்தலொண்டொடிகணவ," என்று அச்சேரன்மலைநாட்டைப் புகழ்ந்துகூறியுமுள்ளார்.(ii) காவிரிநாடு சேரருக்குரியநாடாமாகி லதையேபாடாம லதையொத்தநாட்டிற்குரிய தலைவனே! என்று புகழ்ந்திருக்கக்காரணமுண்டோ? 'குடக்கோ' வென்றும், 'குடவர்கோமான்' என்றும், "சேரன்-பொறையன்-மலையன்,"(iii) 'வெறப்பன்'பறம்பன்'என்றுமே, பழையநூல்களி லிச் சேரர் பலவிடத்துமழைக்கப்படுகின்றனரன்றிப் புனல்நாடுடையராகப்பேசப்படவேயில்லை. பதிற்றுப்பத்திற்பலபாக்களில், சேரர் மலையுங்கடலுந்தருந்திருவுடையரென்று விதந்தோதப் படுகின்றனர். இந்நூலில், மேலக்கடலுக்கும், மலைத்தொடருக்கு மிடைக்கிடக்கும் வளமலைநாட்டையும், அதன் தண்கடற்படப்பை நிலத்தையுமே யிவர்க்குரியவாச்சுட்டியவும், பிறிதெந்நாட்டிற்கும் பொருந்தாதனவுமான பல செய்யுட்பகுதிகளை முன்னே காட்டியுமிருக்கின்றேம். பதிற்றுப்பத்துப்பாக்களிலும், சிலப்பதிகாரவஞ்சிக்

(i) பக்கம் 4.

(ii) பதிற்றுப்-செய்யுள் 90.

(iii) மணிமேகலை காதை. 28, வரி 103; சிலப்பு காதை 16.

காண்டத்திலும், சேரனைமலைநாட்டரசராகவும், "குடதிசையாளுங் கொற்றங்குன்றா ஆர்மார்பிற் சேரர்குலத்தவ"ராகவுமே (i) பேசக் காண்பதன்றி, யாண்டும் காவிரிநாட்டுவராகக் குறிக்கக்காணோம். இதற்குமாறாக, தனக்குரிய மலைநாடொழிய, குமரிமுத லிமயம்வரை வேற்றரசர்நாடுகளே யிருந்தனவென்பதும், வெற்றிவெறியாற் றிக்குவிசயஞ்செய்து புகழுற்றசெங்குட்டுவன் அப் பிறநாட்டரசர்மேற் படையெடுத்துப் பொருது வென்றதும், அவனைப்பாடியபரணர் சாத்தனாராகிய இருபெருஞ்சங்கப்புலவர்வாக்குகளால் வெளிப்படுகின்றன.

(1) வடதிசையெல்லையிமயமாகத்
தென்னங்குமரியொடாயிடையரசர்
முரசுடைப்பெருஞ்சமந்ததையவார்ப்பெழச்
சொல்பலநாட்டைத்தொல்கவினழித்த
போரடுதானைப்பொலந்தார்க்குட்டுவ(ii)

(2) செங்குட்டுவனெனுஞ்செங்கோல்வேந்தன்
பூத்தவஞ்சிபூவாவஞ்சியிற்
போர்த்தொழிற்றானைகுஞ்சியிற்புனைய
நிலநாடெல்லைதன்மலைநாடென்ன
... ... ... ...
தேருமாவுஞ்செறிகழன் மறவரும்
... ... ... கடைஇக்
... ... ... ...
... ... ... பலவேந்த
ரனைவரைவென்றவரம்பொன்முடிமிசை
... ... ... ...
செம்பொன்வாகையுஞ்சேர்த்தியசேரன்(iii)

ஐயங்காரவர்கள் தந்துணிபுக்கியையச் "சேரதேசமென்பது— கருவூர்ப்பிரதேசமுட்பட, கோயம்புத்தூர், சேலம், நீலகிரி ஜில்லாக்களும், மைசூர்நாட்டின் தென்பகுதியும், மேற்குத்தொடர்ச்சிமலை நெடுகவுள்ள கடற்கரைப்பக்கங்களுமாம்."—(iv) என்றெழுதியிருக்

(i) சிலப்பு. வஞ்சிக்காண்டம் கட்டுரைவரி 2, 3.
(ii) பதிற்றுப்—43. (iii) மணிமேகலை—26—77—90.
(iv) பக்கம் 114.

கின்றார்கள். இத்துணைவிரிந்த நிலப்பரப்பை, பலமுறை பிறமன்னரைவென்ற செங்குட்டுவன் தானவரிடமிருந்துவென்றுகொண்ட பெருநாடாகக்கூடப்பேசுகின்றார்களில்லை. இது முழுமையுமே அடிப்பட்ட சங்ககாலச்சேரநாட்டளவாகக்கூறுகின்றார்கள். இதுமுழுதும் செங்குட்டுவன் சொந்தநாடாமாகில், தனிமலைநாடிதிலொரு சிறுபகுதியேயாகவேண்டும்: பெரும்பகுதி காவிரிநாடாகவே, இவன்வெற்றி புகழும் சாத்தனார் "நிலநாடெல்லைதன்மலைநாடாக"வென்றுபாடுவாரா? இத்தொடரா லிவனுக்குரியநாடு மலைநாடேயென்பதும், அஃதொழித்துப் பிறிதிடமெல்லாம் இவன் வெற்றிப்புகழ்மண்டிக்கிடந்த பிற அரசர்நாடாமென்பதும், தெளிவாமன்றோ? இவ்வுண்மைமறக்க மாட்டாத குட்டுவன் சரிதநூலுடையார்களும், தங்கள்நூலில், "சேரர் வஞ்சியைவிட்டுநீங்கி, தங்கட் குரிய மலைநாட்டிற் கடற்கரையிலுள்ள கொடுங்கோளூரைத் தலைமைநகரமாக்கொள்ளலாயினர்(i)", என்பார்கள். இதனால், மலைநாடே யிவர்க்குரியதென்பதொருதலை. அஃதிவர்களுக்கு முடன்பாடெனத்தெரிகின்றோம். இஃதொழியப் பிறதேச மிவர்க்குச்சொந்தமென்பது நிரூபிக்கப்படும்வரை, கருவூர்ப் பிரதேசத்தைச் சேரநாடாகக்கொள்வதாவது, அதனகத்தானிலையை வஞ்சியெனக்கொள்வதாவது பொருத்தமாகாது. இவை பலவாற்றானும், இக்கருவூர்ப்பிரதேசம் சேரநாடெனக் கிடையாமைமட்டுமில்லை; அது புனல்நாடாவதும்பெற்றாம். இதுவுமன்றிப் பழைய வஞ்சி, மலைநாட்டுப்பேராறும்பொருநைக்கழிமுகத்தூர் என்பது மேலேகுறித்த பதிற்றுப்பத்து, சிலப்பதிகாரம், மணிமேகலை மேற்கோள்களானு மினிதுவிளங்குகின்றது. இதுவேபோல், தந்தமையன் செங்குட்டுவன் அரசிருந்த மூதூர்வஞ்சியினகவூர்ப்பாக்கமாம் 'கருவூர்' மேலமலைத்தொடரின்மேற்கே மலைநாட்டோரவதன்றி, சோணாட்டோர்பகுதியா மிவ்வெங்காலநாட்டுக்'கருவூரானிலை'யன்று என்பதை இளங்கோவடிகளே தம்மரியநூலி லையமறக்காட்டியுமுள்ளார். செழித்த காவிரிநாட்டுப்பார்ப்பான் பராசரனென்போன் சேரர் கொடைத்திறங்கேட்டு, செங்குட்டுவனைக்காணவிரும்பி, இடையுறுங் காடுநாடுங்கடந்துவந்து, நீண்டமேற்குமலைத்தொடருந்தன் பிறக்கொழிய மேற்கேகடந்து மேற்சென்று, வஞ்சியெய்திச் செங்குட்டுவன் பாற் பரிசுபெற்றுமீண்டதை அடிகள் பின்வருமாறு கூறுகின்றார்.

---

(i) பக்கம் 132.

பூம்புனற்பழனப்புகார்நகர்வேந்தன்
தாங்காவிளையுணன்றுடைதனுள்
வலவைப்பார்ப்பான்பராசரனென்போன்
குலவுவேற்சேரன்கொடைத்திறங்கேட்டு,
... ... ... ... ...
காடுநாடொழுரும்போகி,
நீடுநிலைமலயம்பிற்படச்சென்றங்கு,
... ... ... ... ...
பார்ப்பனவாகைசூடியேற்புற
நன்கலங்கொண்டுதன்பதிப்பெயர்வோன் (i)

இதில், "நீடுநிலைமலயம்பிற்படச்சென்று" என்னுந்தொடர், சோணாட்டுப்பார்ப்பான் மேற்குமலைத்தொடர்கடந்து, மேற்கேவந்து, மலைநாட்டுக்கருவூராம் வஞ்சிமுற்றங்கண்டான்; என்பதைத் தெளிவாக்கவில்லையா? ஆனிலைக்கருவூரே வஞ்சியும், அதைச்சூழ்ந்தபுனல்நாடே செங்குட்டுவனிருந்தநாடுமாயின், அவ்வளநாட்டுப்பராசரன், அந்நாட்டவ்வூர் அகலவிட்டு மேற்கேநின்றநெடுமலைத்தொடரும் பிற்படச்சென்றுகாணுமாறெங்ஙன்? ஈண்டு அடிகள்குறித்தபடியே, வஞ்சி மேற்கே மலைநாட்டிலுள்ளதென்பதை—சேரர்கருவூரெறிந்த கிள்ளிவளவனைப்பாடிய கோவூர்கிழாரும்,

வஞ்சிமுற்றம்வயக்களனாக
... ... ... ... ...
கொண்டனைபெரும,குடபுலத்ததரி." (ii)

எனவலியுறுத்தியுமுள்ளார். இவ் வளவன்வென்றெடுத்த சேரர்து பேரூராம் 'வஞ்சிமுற்றம்', நடுநாட்டுக்கருவூரானிலையேயாமாகில், அதனையெறிந்த(iii) புகழ்பாடும்புலவர், "குடபுலத்ததரி"-என்று குறிக்கக்காரணமுண்டோ?

இவ்வாறு சேரர் குடபுலத்தரசுவீற்றிருப்பவரேயன்றி, கிழக்கே காவிரிபாயும் வெங்காலநாட்டிற்றங்காதவரென்பதை, "குடதிசையாளுங்கொற்றவேந்தர்" (iv)என்னும் அடிகள்வாக்கும் விசதப்படுத்துகின்றது.

(i) சிலப்பதிகாரம்—23, வரி—59, 73.
(ii) புறம்—373.
(iii) எறிதல்—ஓர் ஊரை முற்றி எடுத்தல்—(Taking a fort by storm)
(iv) சிலப்பதிகாரம்—27, வரி—197.

## 12-ம் பகுதி. வஞ்சி, மகோதை வஞ்சைக்களமே.

“மேலும் கருவூர் என்றபெயர் கொடுங்கோளூர் அல்லது திருவஞ்சைக்களத்துக்குஉள்ளதாகப்பிரமாணமொன்றுங்காணப்படாமையறிக”(i)என்று சுட்டுகின்றார்கள். இல்லாமையாற்பெறுவதென்னை? இதனாலிக்கடற்கரையூர் பழையவஞ்சியாகாதென்பது எப்படிக்கிடைக்கின்றது? ‘கருவூர்’ என்னும்பெயரே, இவர்கள் தம் புத்தகமுதலதிகாரமுன்னுரையில், “சேரவரசர்பெருமைகள்”பற்றிய தமதாராய்ச்சிக்குச் சிறந்தசாதனங்களாகக்கொண்டுள “சிலப்பதிகாரம், மணிமேகலை, பதிற்றுப்பத்து” ஆகிய மூன்று நூல்களுமறியாததாகின்றது. திருவாணிலையில் வஞ்சிபற்றிய குறிப்பொன்றுமில்லையென் றிவர்களே கூறியுமிருக்கின்றார்கள். கருவூராணிலைக்கு வஞ்சியென்றபெயரே தற்காலம் வழங்கவில்லையன்றோ? பலபிறசான்றுகளா லிம்மகோதை வஞ்சைக்களமே வஞ்சியிடமென்பதுபெறுமேல், கருவூர்என்னும்பெயர்வழங்காமைகொண் டிதனை மறுக்கலாமோ? கருவூராணிலைக்கு வஞ்சிப்பெயர்வழங்காதிருக்கவும், வஞ்சியநகரின் பிறபெயராய ‘கருவூர்’ என்பதும் ஆணிலைக்கருவூரும் ஓரோசை பெற்றிருப்பதுகொண் டதை வஞ்சியெனவாதிக்கமுன்வந்தவர்கள், வஞ்சைக்களத்தை “வஞ்சியோடும் சம்பந்தமுடையதாகக்கருதற்குச் சிறிதுமாதாரமின்மைகாண்க”(ii) என் றறைகூவலென்னே? திருவஞ்சைக்களத்தின் அலைவாய்த்துறையான மகோதையே கொடுங்கோளூரென்பதை யிவர்கள் அங்கீகரிக்கின்றார்கள்.(iii) ஆனால் மகோதையோடு வஞ்சித்துறைமுகத்தையும், திருவஞ்சைக்களத்தோடு வஞ்சிமுற்றத்தையு மொன்றாக்கிப்பாடிய சேக்கிழார்குறிப்பை வெறுக்கின்றார்கள். “கடலங்கரைமேல் மகோதையணியார்பொழில் அஞ்சைக்களத்தப்பனே” என்ற சுந்தரர் தேவாரவடிகொண்டு, இவ்வூர் அஞ்சைக்களமென்றும், வஞ்சிப்பெயருக்கிது சம்பந்தமுடையதாகாதென்றும் துணிகின்றார்கள். எல்லையற்றதொல்லைப் புறநானூற்றுப்பாக்களிலும் சிலப்பதிகாரத்திலும் பழையவஞ்சியிற் சேரவரசர்குடியிருந்த பகுதியை வஞ்சிமுற்றமென்றே குறிக்கப்பட்டிருப்பது கவனிக்கத்தக்கது. இந்நகரத்தைப் பொதுவாகப்பேசுமிடத்தெல்லாம் வஞ்சிமூதூர

(i) பக்கம் 126.
(ii) பக்கம் 126.
(iii) பக்கம் 125.

ரென்றும், அரனுடைய அரசநகரத்தை வஞ்சிமுற்றமென்றும் பிரிந்து கூறியகுறிப்பு மிகப்பொருளுடைத்தாம். பேராற்றின் கழிமுகம் கடற்பரப்போடொக்க மிகத்தாழ்ந்து அலிமுகமாயதால், அதையடுத்த மேட்டுநிலத்தே யரணிட்ட அரசன்குடிப்பாக்கமேற்பட்டும், அதுவே பிந்திக் கருவூரெனவழங்கப்பட்டும்வந்திருப்பதை மேலேகாட்டினே மன்றோ ? இப்பகுதி பழையநூல்களில் வஞ்சிமுற்றமென்றே சுட்டப் பட்டுளது. "மலைகாண்குவமென, வஞ்சிமுற்றநீங்கிச்செல்வோன்" (i) என்ற இளங்கோவடிகள்வாக்கும், வஞ்சியி லரசனரண்மனையிருந்த கருவூர்ப்பாக்கத்தைமுற்றியவளவனை "வஞ்சிமுற்றம் வயக்களனாக, அஞ்சாமறவராட்போர் பழித்துக், கொண்டனைபெரும குடபுலத்த தரி" (ii) என்றுபாடிய கோவூர்கிழார்வாக்குமே யிதற்குச்சிறந்த சான் றும். பட்டினப்பாக்கமும் அரசன் குடிப்பாக்கமுங்கூடியது வஞ்சி மூதூர். பிற்காலத்தே பட்டினப்பாக்கம் மகோதையென்றும், அக நகராய கருவூர்ப்பாக்கம் வஞ்சிமுற்றமென்றும் அழைக்கப்பெற்றன. இவ்வஞ்சிமுற்றம் நாளடைவில் வஞ்சைக்களமாயிற்று. துவரை, மாந்தை, தஞ்சை, முகவை, நெல்லை, துறைசை, உறந்தை, கரந்தை என்னூர்ப்பெயர்கள் தமிழகத்தே குறுகி ஐகாரமேற்று நடைபெறு மியல்பறியாதாரில்லை. வஞ்சியு மிம்முறையில் வஞ்சையாகவே, அதற் கேற்ப வஞ்சிமுற்றம் வஞ்சைக்களமானது வெகு சுலபமன்றோ ? பிற்காலத்திது தலங்களுள்வைத்தெண்ணப்படுங்கால் 'திரு' அடை பெற்று, திருவஞ்சைக்களமாயிருக்கவேண்டும். இதற்குப் பிற்காலத் தார், 'திரு' என்ப துபசாரவடையாகவே, அதற்கடுத்த வகரம் உடன் படுமெய்யெனக்கருதி, அடையகற்றி, அஞ்சைக்களமாக்கினர் போலும். சரகத்தைச் சாகமெனக்கொண்டு மயங்கினவர்களும்பெரும் புலவர்களேயாதலால், திருவஞ்சைக்களம் திரு அஞ்சைக்களமானதில் வியப்புத்தானென்னே ? அன்றியும் ; திருவஞ்சைக்களப்பதிகத்தில்,

---

(i) சிலப்புகாட்சிக்காதை வரி 7.

(ii) புறம் 373.

சுந்தரமூர்த்திசுவாமிகள் தாம்பாடும் மகோதைத்தலமூர்த்தியின் பெயரே சுட்டிப்பாடியிருப்பதல்லால், அவ் வூர்ப்பெயரைச்சுட்டவில்லை என்பதும் வெளிப்படை. யாண்டு மிவ்வூர்க்கு அஞ்சைக்களமென்னும் பெயர் எடுத்தாளப்பட்டதாயுமில்லை. இஃதெவ்வாறாயினுமாகுக. மேற்கூறிவந்தபலவாற்றானும் வஞ்சி மலைநாட்டுத்தலைநகராய், ஆன்பொருநையாகிய பேராற்றின்கழிமுகத்தமைந்த பேரூர் என்பது ஒருதலையாகப்பெறப்பட்டதாகலானும், அப்பேராற்றினலைவாய்ப்பட்டினமாகிய மகோதையென்றகொடுங்கோளூரு மதையடுத்த ஐயங்காரவர்கள் 'அஞ்சைக்கள'மென்ற "திரு வஞ்சைக்களமும்" யவனர்கலநலநிறைக்க வளமிகமலிந்தகடற்கரை வஞ்சி நின்றவிடத்தேநிற்பவாகலானும், இவையொன்றெனவியல்பேயாகும். ஆகவே, சேரர்சங்ககாலப்பேரூர் பேராற்றின்மலைவாரத்தே கடலினின்றும் சுமார் 30-மைலுக்கப்பாலுள்ள திருக்கரூருமன்று ; காவிரியாம்பிராவதிக்கூட்டத்திற்குமேற்கே புனல்நாட்டிலுள்ள சோழர் பழவூரான திருவானிலையுமாகாது ; பண்டைத்தமிழ்வாணர்பலரும் பாராட்டிய மலைநாட்டுப்பேராற்றின் கழிமுகப்பட்டினமேயாம் ; என்பது விசதமாகும்.

இறுதியில், ஆபுத்திரநாட்டிலிருந்து வஞ்சிக்குவந்த மணிமேகலை செங்குன்றில் கண்ணகிகோயிலிலிறங்கித்தரிசித்துப் பிறகு வஞ்சியுட்புக்கனள் என்னுங்கதைகாட்டி, அதனால் வஞ்சி அம்மலையினின்று நெடுந்தூரமிருக்கவேண்டுமெனத் தனக்குவேண்டியபடியனுமித்துக்கொண்டு, அதனால் கருவூரானிலையே வஞ்சியாகுமெனவாதிக்கின்றார்கள். மேலே 'கருவூர்' 'மகோதை'என் றிருபாக்கங்கள்சேர்ந்த பேரூரே வஞ்சியென்றும், அதை ஐயங்காரவர்கள் எடுத்தாளும் நக்கீரர்பாட்டே வலியுறுத்துமென்றுங்கூறி, அதன்சார்பாக அவ் வகப்பாட்டின் "கருவூர் முன்றுறைமணல்" என்னுந்தொடரைவிளக்குங்கால் செங்குன்றுசம்பந்தமாகப் பழைய நூல்களிற்காணப்படுங் குறிப்புக்களே வஞ்சி கருவூரானிலையாகாதெனச்சுட்டுவதைக் காட்டி

யுள்ளேம். சாத்தனர், மணிமேகலை மணிபல்லவத்திருந்து புறப்படும் போதே "வஞ்சியுட்செல்வனென்றந்தரத்தெழுந்தனள் அணியிழை தா"(i)னென விதந்துகூறுகின்றார். ஆகவே, புறப்படுங்கால் மணி மேகலைக்குக் கண்ணகிகோயிலைக்காணுங்கருத்து முன்னின்றதாயில்லை. வஞ்சிநோக்கி வழிக்கொண் "டணியிழையந்தரமாறுவெழுந்தவள்,"ii) இடையே வழியில் "கொடுங்கோளூருக்கயலதாய செங்குன்றின்"(iii) மேல்நின்ற தாய்கண்ணகி தாதைகோவல னிவர்கள் "கைவினை முற்றியதெய்வப்படிமம்"(iv) அமைந்த "கோட்டம்புகுந்துவணங்கி யேத்தி,"பிறகு தான் நினைத்துவந்தபடி வஞ்சிக்குப்போக விடையேற் குங்கால், ஆங்குப்பத்தினிக்கடவுள் "இளையள்வளையோளென் றுனக் கியாவரும், விளைபொருளுரையார்; வேற்றுருக்கொள்கென"ப்பணித் திட, அதன்படி "மாதவன்வடிவாய்"ப் "பொற்கொடிப்பெயர்ப்படீ உம் பொன்னகர்பொலிந்தனள்" என்பதே சாத்தனர்கூறியுள்ள வஞ்சிக்கு மணிமேகலைவந்த வாலாறும். "கண்ணகிவிண்ணுடுசென்ற தும்," "பத்தினித்தேவிக்குக் கோயிலெடுத்துச்சிறப்பித்த" இடமு மான இச் 'செங்குன்று,' மலைகாண்குவமெனச் "செங்குட்டுவன் சென்றிருந்த பேரியாற்றங்கரைக்குச்சமீபத்தது"(v) என் றையங்கா ரவர்களுமிம்மலைச்சம்பந்தமாக அடியார்க்குநல்லார்கருத்தை மறுக் காது தழுவுகின்றார்கள். இவ்வாறு இம்மலை சேரர்போரற்றங்கரை யருகே மேற்குமலைத்தொடரையொட்டிக் கொடுங்கோளூருக்கயல தாகலானும், மணிபல்லவம் காவிரிக்கழிமுகத்துப் புகார்ப் பட்டினத்திற்குத் தெற்கேயமைந்திருந்ததாகலானும்,(vi) அக்கீழ்க்

(i) மணி காதை 25. வரி 238, 239.

(ii) மணி காதை 26. வரி 1, 5, 6, 68, 69, 71 to 92.

(iii) சிலப்பு அடியார் உரைபக்கம் 18.

(iv) சிலப்பு நடுகற்காதை வரி 228. கோட்டம்=கோயில்.

(v) பக்கம் 134.

(vi) மணிமேகலை 6, 211, 213.

கடன் மணிபல்லவத்திருந்து வஞ்சிக்குவரும் மணிமேகலை, வஞ்சி கருவூரானிலையாமாகில் நேரே கருவூருக்குச்செல்வதல்லால், வழி பிறழ்ந்து கருவூருக்கு 300-மைலுக்கு மேற்குள்ள செங்குன்றமலை வந்திறங்கக்காரணமில்லை. மணிமேகலை மணிபல்லவத்திருந்து முதலில் மேற்குவந் திம்மலைகண்டு மீட்டும் கிழக்கே வஞ்சிக்குவழி கொண்டதான கதையுமில்லை. முதலிலேயே கண்ணகியைக்கண்டு, பிறகு வஞ்சிக்குப்போவதான நினைப்பவளுக்கில்லையென்பதும், விசும் பாறுகவஞ்சிநோக்கிச்செல்பவள் கண்ணகிகோட்டமமைந்த இச் செங்குன்றமலை இடைவழிப்படலா லங்குத்தங்கிவழிபட்டுப் பின்றன் வழிப்பட்டு வஞ்சியூர் வந்துபுகுந்தனள் என்பதும் மேலேகாட்டிய படி சாத்தனார் பழையநூலாற் பெறப்படுகின்றன. இதனால் செங் குன்றமலை மணிபல்லவத்திற்கும் வஞ்சிக்குமிடையேயிருக்கவேண்டு மென்பது தெளிவாகின்றது. அச்செங்குன்றமலைக்கு அயலதாகச் சிறிது மேற்கேநிற்கும் கொடுங்கோளூரே யிவ்வஞ்சியாமாகில், மணி மேகலைக்குச் சாத்தனார்தந்துவைத்தவழிமுறை தெளிவாவதோடு, இக் கொடுங்கோளூரே பழையவஞ்சியென்னும் அடிப்பட்ட பழவழக்கும் வலிபெறுகின்றது. இவை பலவும், இன்னவும் பிறவும், சேரர்பேரூ ரான வஞ்சிமூதூர் மலைநாட்டில், மேலக்கடற்கரையில், பேராற்றின் கழிமுகத்திலமைந்த பழம்பட்டினமேயன்றிப் பிறிதொன்றுமன்றெனுமுண்மை நாவு மாகாதென்பதைப் பசுமரத்தாணிபோல் வலிபெறநாட்டிநிற்கும்.

முற்றும்.